விண்ணி னின்று மின்னெழுந்து மின்னொடுங்கு மாறுபோல்
என்னுள் நின்று மெண்ணு மீச னென்னகத் திருக்கையால்
கண்ணி னின்று கண்ணில் தோன்றும் கண்ணறிவி லாமையால்
என்னு ணின்ற வென்னையு மியானறிந்த தில்லையே. 263

அடக்கி னும்ம டக்கொணாத அம்பலத்தி னூடு போய்
அடக்கி னும்ம டக்கொணும லன்பு ருக்கு மென்னுளே
கிடக்கி னும்மி ருக்கினுங் கிலேசம் வந்தி ருக்கினும்
நடக்கி னும்மி டைவிடாத நாத சங்கொ லிக்குமே. 264

மட்டு லாவு தண்டுழா யலங்க லாய்! பு னற்கழல்
விட்டு வீழில் தாகபோக விண்ணில் நண்ணில் வெளியினும்
எட்டி னோடி ரண்டினு மிதத்தி னூல்அ மைந்தனை
கட்டி வீடி லாதுவைத்த காத லின்ப மாகுமே. 265

ஏக முற்றி மூன்றுமுற்றி நாலு முற்றி நன்மைசேர்
போக முற்றிப் புண்ணியத்தில் முற்றி யன்று முற்றியாய்
நாக முற்ற சயனமாய் நலங்க டல்க டந்ததீ
யாக முற்றி யாகிநின்ற தென்கொ லாதி தேவனே! 266

மூன்று முப்பத் தாறினோடு மூன்று மூன்று மாயமாய்
மூன்று முத்தி யாகிமூன்று மூன்று மூன்று மூன்றுமாய்த்
தோன்று சோதி மூன்றதாய்த் துலக்க மில்வி ளக்கதாய்
ஏன்றெ னாவி னுள்புகுந்த தென்கொ லோவெம் மீசனே!

ஐந்து மைந்து மைந்துமா யல்ல வற்று ளாயுமாய்
ஐந்து மூன்று மொன்றுமாய் நின்ற வாதி தேவனே!
ஐந்து மைந்து மைந்துமா யமைந்த னைத்து நின்றநீ
ஐந்து மைந்து மாயநின்னை யாவர் காண வல்லரே? 268

ஆறு மாறு மாறுமாயொ ரைந்து மைந்து மைந்துமாய்
ஏறு சீரி ரண்டுமூன்று மேழு மாறு மெட்டுமாய்
வேறு வேறு ஞானமாகி மெய்யி னோடு பொய்யுமாய்
ஊறு மோசை யாயமர்ந்த மாய மாய மாயனே! 269

எட்டு மெட்டு மெட்டுமாயொ ரேழு மேழு மேழுமாய்
எட்டு மூன்று மொன்றுமாகி நின்ற வாதி தேவனே!
எட்டுமாய பாதமோ டிறைஞ்சி நின்ற வண்ணமே
எட்டெ ழுத்து மோதுவார்க ளல்லல் நீங்கி நிற்பரே. 270

பத்தி னோடு பத்துமாயொ ரேழி னோடு மொன்பதாய்ப்
பத்து நாற்றி சைக்குணின்ற நாடு பெற்ற நன்மையாய்
பத்து மாய கொத்த மோடு மத்தலமிக் காதிமால்
பத்தர் கட்க லாது முத்தி முத்தி முத்தி யாகுமே. 271

வாசி யாகி நேசமொன்று வந்தெ திர்த்த தென்னுக
நேச மாக நாளுலாவ நன்மை சேர்ப வங்களில்
வீசிமேல் நிமிர்ந்த தோளு மில்லை யாக்கி னுய்கழல்
ஆசை யால்ம றக்கலா தமர ராக லாகுமே. 272

எளிய தான காய மீதி லெம்பிரா னிருப்பிடம்
அளிவு ருது நின்றதே அகார மும்உ காரமும்
கொளுகை யான சோதியுங் குலாவி நின்ற தவ்விடம்
வெளிய தாகு மொன்றிலே விளைந்த தேசி வாயமே. 273

அஞ்செ ழுத்து மூன்றெழுத்து மென்று ரைக்கு மன்பர்காள்!
அஞ்செ ழுத்து மூன்றெழுத்து மல்ல காணு மப்பொருள்;
அஞ்செ ழுத்தை நெஞ்ச ழுத்தி அவ்வெழுத் தறிந்தபின்
அஞ்செ ழுத்து மூன்றெ ழுத்து மவ்வுமாஞ் சிவாயமே. 274

பொய்யு ரைக்கப் போத மென்று பொய்யருக் கிருக்கையால்
மெய்யு ரைக்க வேண்டு தில்லை மெய்யர் மெய்க்கி லாமையால்
வைய கத்தி னுண்மை தன்னை வாய் திறக்க அஞ்சினேன்;
நைய வைத்த தென்கொலோ நமசி வாய நாதனே! 275

ஒன்றை யொன்று கொன்றுட னுணவு செய்தி ருக்கினும்
மன்றி னூடு பொய்களவு மாறு:வேறு செய்யினும்
பன்றி தேடு மீசனைப் பரிந்து கூட வல்லிரேல்
அன்று தேவ ரும்முனே யறிந்து ணர்ந்து கொள்ளுமே.

மச்ச கத்து ளேயிவர்ந்து மாயை பேசும் வாயுவை
அச்ச கத்து ளேயிருந் தறிவு ணர்த்திக் கொள்விரேல்
அச்ச கத்து ளேயிருந் தறிவு ணர்த்திக் கொண்ட பின்
இச்சை யற்ற எம்பிரா னெங்கு மாகி நிற்பனே. 277

வரகிலே முளைத்த செந்நெல் களைய தான வாறுபோல்
உரவி னோரும் உண்மை கூறின் ஒவ்வுமாற தங்ஙனே ;
விரகிலே முளைத்தெ ழுந்த மெய்ய லாது பொய்யதாய்
நரகிலே பிறந்தி ருந்து நாடு பட்ட பாடதே. 278

ஆடு கின்ற எம்பிரானை யங்கு மிங்கு மென்றுநீர்
தேடு கின்ற பாவிகாள்! தெளிந்த ஒன்றை ஓர்கிலீர் ;
காடு நாடு வீடுவிண் கலந்து நின்ற கள்வனை
நாடி யோடி யும்முளே நயந்து ணர்ந்து பாருமே. 279

ஆடுகின்ற அண்டர் கூடு மப்பு றம்ம திப்புறம்
தேடு நாலு வேதமுந் தேவ ரான மூவரும்
நீடு வாழி பூதமும் நின்ற தோர்நி லைகளும்
ஆடு வாழி னொழியலா தனைத்து மில்லை யில்லையே. 280

ஆவ தும்ப ரத்துளே அழிவ தும்ப ரத்துளே;
போவ தும்ப ரத்துளே புகுவ தும்ப ரத்துளே;
தேவ ரும்ப ரத்துளே திசைக ளும்ப ரத்துளே;
யாவ ரும்ப ரத்துளே யானு மப்ப ரத்துளே. 281

ஏழுபா ரெழுக டல்இ பங்க ளெட்டு வெம்புடன்
சூழு வான்கி ரிகடந்து சொல்லு மேழு லகமும்
ஆழி மால்வி சும்புகொள்பிர் மாண்ட ரண்ட அண்டமும்
ஊழி யானொ ளிக்குளே யுதித் துடனொ டுங்குமே. 282

கயத்து நீரி றைக்கிறீர் கைகள் சோர்ந்து நிற்பதேன் ?
மனத்து ளீர மொன்றிலா மதியி லாத மாந்தர்காள் !
மனத்து ளீரங் கொண்டுநீ ரமுக்க றுக்க வல்லிரேல்
நினைத்தி ருந்த சோதியும் நீயும் நானு மொன்றலோ? 283

நீரிலே பிறந்தி ருந்து நீர்ச டங்கு செய்கிறீர் ;
ஆரை யுன்னி நீரெலா மவத்தி லேயி றைக்கிறீர் ?
வேரை யுன்னி வித்தை யுன்னி வித்திலே முளைத்தெழுஞ்
சீரை யுன்ன வல்லிரேற் சிவப தம்ம டைவிரே. 284

பத்தொ டுத்த வாசலிற் பரத்து மூல வக்கரம்
முத்தி சித்தி தொந்தமென் றியங்கு கின்ற மூலமே
மத்த சித்த ஐம்புலன் மகார மான கூத்தையே
அத்தி யூரர் தம்முளே யமைந்த தேசி வாயமே. 285

அறிவி லோடு மண்டமா யளவி டாத சோதியைக்
குணம தாகி யும்முளே குறித்தி ருக்கின் முத்தியாம் ;
முணமு மொன்றே உம்முளே விரலை யொன்றி மீளவும்
தினந்தி னம்ம யக்குவீர் செம்பு பூசை பண்ணியே. 286

மூல மான அக்கர முகப்ப தற்கு முன்னெலாம்
மூல மாக மூடுகின்ற மூட. மேது மூடரே !
கால னை அஞ்சு பூத மஞ்சிலே யொடுங்கினல்
ஆதி யோடு கூடுமோ அனாதி யோடு கூடுமோ? 287

முச்சதுர மூல மாகி முடிவு மாகி யேகமாய்
அச்ச துர மாகி யேய டங்கி யோரெ ழுத்துமாய்
மெய்ச்சதுர மெய்யு ளேவி ளங்கு ஞான தீபமாய்
உச்ச ரிக்கு மந்தி ரத்தி னுண்மையே சிவாயமே. 288

வண்டு லங்கு போலுநீர் மனத்து மாச றுக்கிலீர்;
குண்டு ரங்கள் போலுநீர் குடத்தி லேமு ழுகிறீர்;
பண்டு முங்கள் நான்முகன் பறந்து தேடிக் காண்கிலான் ;
கண்டி ருக்கு மும்முளே கலந்தி ருப்பர் காணுமே. 289

நின்ற தன்றி ருந்ததன்று நேரி தன்று கூரிதன்று
பந்த மன்று வீடுமன்று பரவ சங்க ளற்றது ;
கெந்த மன்று கேள்வியன்று கேடி லாத வானிலே
அந்த மின்றி நின்ற தொன்ற தெங்ஙனே யுரைப்பதே?

பொருது நீரு மும்முளே புகுந்து நின்ற காரணம்
எருதி ரண்டு கன்றையீன்ற ஏக மொன்றை ஓர்கிலீர்
அருகி ருந்து சாவுகின்ற ஆணவ யும்ம றிந்திலீர்
குருவி ருந்து லாவுகின்ற கோல மென்ன கோலமே? 291

அம்ப ரத்து ளாடுகின்ற அஞ்செ ழுத்து நீயலோ?
சிம்பு ளாய்ப்ப றந்து நின்ற சிற்பரமு நீயலோ ?
எம்பி ரானு மெவ்வுயிர்க்கு மேக போக மாதலால்
எம்பி ரானு நானுமா யிருந்த தேசி வாயமே. 292

ஈரொளிய திங்க ளேயி யங்கி நின்ற தற்பரம்;
ஏரொளிய திங்க ளேயஃ தியாவ ரும்ம றிகிலீர் ;
காரொளிய படல முங்க டந்து போன தற்பரம்
பேரொளிப் பெரும்ப தம்மு மேக நாத பாதமே. 293

கொள்ளொ ணாது மெல்லொ ணாது கோத றக்கு தட்டொணு
தள்ளொணு தணுகொ ணாத தாழ லான்ம னத்துளே
தெள்ளொணு து தெளியொ ணாது சிற்ப ரத்தி னுட்பயன்
விள்ளொணாத பொருளை நான்வி ளம்பு மாற தெங்ஙனே ?

வாக்கி னல்ம னத்தினல் மதித்த கார ணத்தினல்,
நோக்கொ ணாத நோக்கையுன்னி நோக்கை யாவர் நோக்குவார் ?
நோக்கொணாத நோக்கு வந்து நோக்க நோக்க நோக்கிடில்
நோக்கொணாத நோக்கு வந்து நோக்கை யெங்க ளுேக்குமே? 295

உள்ளி னும்பு றம்பினு முலக மெங்க ணும்பரந்
தெள்ளி லெண்ணெய் போலநின் றியங்கு கின்ற எம்பிரான்
மெள்ள வந்தெ னுட்புகுந்து மெய்த்த வம்பு ரிந்தபின்
வள்ள லென்ன வள்ள லுக்கு வண்ண மென்ன வண்ணமே?

வேத மென்று கண்டிலேன் வெம்பி றப்பி லாமையாய்ப்
போத நின்ற வடிவதாய்ப் புவன மெங்கு மாயினுய்
சோதி யுள்ளொ ளியுமாய்த் துரிய மோட தீதமாய்
ஆதி மூல மாதியா யமைந்த தேசி வாயமே. 297

சாணி ரும்ம டங்கினுற் சரிந்த கொண்டை தன்னுளே
பேணி யப்ப திக்குளே பிறந்தி றந்து ழலுவீர்!
தோணி யான ஐவரைத் துறந்த றுக்க வல்லிரேல்
காணி கண்டு கோடியாக் கலந்த தேசி வாயமே. 298

அஞ்சு கோடி மந்திரம் அஞ்சு ளேய டங்கினுல்
நெஞ்சு கூர வும்முளே நினைப்ப தோரெ ழுத்துளே
அஞ்சு நாலு மூன்ற தாகி யும்முளே யடங்கினுல்
அஞ்சு மோரெ ழுத்ததா யமைந்த தேசி வாயமே. 299

அக்க ரந்த அக்கரத்தி லுட்க ரந்த அக்கரம்
சக்கரத்துச் சிவ்வை யுண்டு சம்பு ளத்தி ருந்ததும்
எட்க ரந்த எண்ணெய் போல எவ்வெழுத்து மெம்பிரான்
உட்க ரந்து நின்றநேர்மை யாவர் காண வல்லரே? 300

ஆக மத்தி னுட்பொரு ளகண்ட மூல மாதலால்
தாக போக மின்றியே தரித்த தற்ப ரமுநீ
ஏக மாக வைத்தனை யுணர்த்து மஞ்செ ழுத்துளே
ஏக போக மாகியே யிருந்த தேசி வாயமே. 301

மூல வாசல் மீதுளேயோர் முச்ச துர மாகியே
நாலு வாச லெண்விரல் நடுவு தித்த மந்திரம்
கோல மொன்று மஞ்சு மாகு மிங்கலந்து நின்றநீ
வேறு வேறு கண்டிலேன் விளைந்த தேசி வாயமே. 302

சுக்கி லத்தி டியுளே சுழித்த தோரெ ழுத்துளே
அக்க ரத்தி டியுளே யமர்ந்த வாதி சோதிநீ
உக்க ரத்த டியுளே யுணர்ந்த அஞ்செ ழுத்துளே
அக்க ரம்ம தாகியே அமர்ந்த தேசி வாயமே. 303

குண்ட லத்து ளேயுளே குறித்த கத்து நாயகன்
கண்ட வந்த மண்டலங் கருத்த ழித்த கூத்தனை
விண்ட லர்ந்த சந்திரன் விளங்கு கின்ற மெய்ப்பொருள்
கண்டு கொண்ட மண்டலஞ் சிவாய மல்ல தில்லையே. 304

கூற்று மைந்து கூடமென்று சொல்லி றந்த தோர்வெளி
சத்தியுஞ் சிவனு மாக நின்ற தன்மை யோர்கிலீர் ;
சத்தி யாவ தும்முடல் ; தயங்கு சிவ னுட்சிவம் ;
பித்தர் காள்அ றிந்திலீர் பிரானி ருந்த கோலமே. 305

மூல மென்ற மந்திர மூளைத்த அஞ்செ ழுத்துளே
நாலு வேத நாவுளே நவின்ற ஞான மெய்யுளே
ஆல முண்ட கண்ட னும்ம ரியய னு மாதலால்
ஓல மென்ற மந்திரஞ் சிவாய மல்ல தில்லையே. 306

நத்து வங்க ளென்றுநீர் தமைக்க டிந்து போவிர்காள் !
தத்துவஞ் சிவம தாகில் தற்ப ரம்மு நீரல்லோ?
முத்த சிவ னுதமே மூல பாதம் வைத்தபின்
அத்த னுரு மும்முளே யறிந்து ணர்ந்து கொள்ளுமே. 307

மூன்று பத்து மூன்றையு மூன்று சொன்ன மூலனே
தோன்று சேர ஞானிகாள் ! துய்ய பாத மென்றலை
ஏன்று வைத்த வைத்தபின் இயம்பு மஞ்செ ழுத்தையும்
தோன்ற வோத வல்லிரேல் துய்ய சோதி காணுமே. 308

உம்பர் வான கத்தினும் உலக பார மேழினும்
நம்பர் நாடு தன்னினும் நாவ லென்ற தீவினும்
செம்பொன்மாட மல்கு தில்லை யம்ப லத்து ளாடுவான்
எம்பிரா னலாது தெய்வ மில்லை யில்லை யில்லையே. 309

பூவி லாய ஐந்துமாய்ப் புனலில் நின்ற நான்குமாய்த்
தீயி லாய மூன்றுமாய்ச் சிறந்த காலி ரண்டுமாய்
வேயி லாய தொன்றுமாய் வேறு வேறு தன்மையாய்
நீய லாமல் நின்றநேர்மை யாவர் காண வல்லரே?[1] 310

அந்த ரத்தி லொன்றுமா யசைவு காலி ரண்டுமாய்ச்
செந்தழலில் மூன்று மாகிச் சிறந்த அப்பு நான்குமாய்
ஐந்து பாரி லைந்துமா யமர்ந்தி ருந்த நாதனைச்
சிந்தையிற் றெளிந்த மாயை யாவர் காண வல்லரே? 311

[1] திருச்சந்த விருத்தம் ஒப்பு நோக்குக.

மனவி கார மற்றுநீர் மதித்தி ருக்க வல்லிரேல்
நினைவி லாத மணிவிளக்கு நித்த மாகி நின்றிடும்;
அனைவ ரோதும் வேதமு மகம்பி தற்ற வேணுமேற்
கனவு கண்ட துண்மைநீர் தெளிந்த தேசி வாயமே. 312

இட்ட குண்ட மேதடா! இருக்கு வேத மேதடா!
சுட்ட மட்க லத்திலே சுற்று நூல தேதடா!
முட்டி நின்ற தூணிலே முளைத்தெ ழுந்த சோதியைப்
பற்றி நின்ற தேதடா! பட்ட நாத பட்டரே! 313

நீரிலே முளைத்தெ ழுந்த தாம ரையி னோரிலை
நீரினோடு கூடி நின்றும் நீரி லாத வாறுபோல்
பாரிலே முளைத்தெ ழுந்த பண்டி தப்ப ராபரம்
பாரி னோடு கூடிநின்ற பண்பு கண்டி ருப்பிரே. 314

உறங்கி லென்வி ழிக்கிலென் உணர்வு சென்றொ டுங்கிலென்?
சிறந்த வைம்பு லன்களுந் திசைத்தி சைக ளொன்றிலென்?
புறம்பு முள்ளு மெங்கணும் பொதிந்தி ருந்த தேகமாய்
நிறைந்தி ருந்த ஞானிகாள்! நினைப்ப தேது மில்லையே. 315

ஓது வார்க ளோதுகின்ற வோரெ ழுத்து மொன்றதே;
வேத மென்ற தேகமாய் விளம்பு கின்ற தன்றிது;
நாத மொன்று நான்முகன் மாலு நானு மொன்றதே;
ஏது மன்றி நின்றதொன்றை யானு ணர்ந்த நேர்மையே.

பொங்கியே தரித்த அச்சுப் புண்ட ரீக வெளியிலே
தங்கியே தரித்த போது தாது மாது ளையதாம்;
அங்கியுட் சரித்த போது வடிவு கள்ளொ ளியுமாய்க்
கொம்புமேல் வடிவு கொண்டு குருவி ருந்த கோலமே. 317

மண்ணு ளோரும் விண்ணு ளோரும் வந்தவா றதெங்கெனில்
கண்ணி னோடு சோதிபோற் கலந்த நாத விந்துவும்
அண்ண லோடு சத்தியு மஞ்சு பஞ்ச பூதமும்
பண்ணி னோடு கொத்தழிப்ப பாரொ டேழு மின்றுமே.

ஒடுக்கு கின்ற சோதியு முந்தி நின்ற வொருவனும்
நடுத்த லத்தி லொருவனும் நடந்து காலி லேறியே
விடுத்து நின்ற இருவரோடு மெய்யி னேடு பொய்யுமாய்
அடுத்து நின்ற நிமிஞே அனுதி நின்ற வாதியே. 319

உதித்த மந்தி ரத்தினு மொடுங்கு மக்க ரத்தினும்
மதித்த மண்ட லத்தினு மறைந்து நின்ற சோதிநீ;
மதித்த மண்ட லத்துளே மரித்து நீயி ருந்தபின்
சிறுத்த மண்ட லத்துளே சிறந்த தேசி வாயமே. 320

இருத்தி வைத்த சற்கு ருவைச் சீர்பெற வணங்கிலீர்
குருக்கொ டுக்கும் பித்தரே! கொண்டு நிந்த வல்லிரோ?
குருக்கொ டுக்கும் பித்தருங் குருக்கொள் வந்த சீடனும்
பருத்தி பட்ட பாடுதான் பன்னி ரண்டும் பட்டதே. 321

விழித்த கண் துதிக்கவும் விந்து நாத வோசையும்
மேருவுங் கடந்த வண்ட கோள முங்க டந்துபோய்
எழுத்தெலா மறிந்து விட்ட இந்த்ர சால வெளியிலே
யானு நீயு மேகலந்த தென்ன தொன்மை யீசனே! 322

ஓம்ந மோவென் றும்முளே உபாதை யென்ற றிந்தபின்
பானு டற்க ருத்துளே பாவை யென்ற றிந்தபின்
நானு நீயு முண்ட டாந லங்குலம துண்டடா!
ஊனு மூனு மொன்றுமே யுணர்த்தி டாயெ னக்குளே.

ஐம்புலனை வென்ற வர்க்கிங் கன்ன தான மீவதால்
நன்பு லன்க ளாகிநின்ற நாத ருக்க தேறுமோ?
ஐம்பு லன்கள் வென்றிடா தவத்த மேயு மூன்றிடும்
வம்ப ருக்கு மீவ துங் கொடுப்ப துமம் வத்தமே. 324

ஆதியான ஐம்பு லன்க ளவையு மொக்கு ளொக்குமோ?
யோனியிற் பிறந்தி ருந்த துன்ப மிக்கு மொக்குமோ?
வீணர்காள்!பி தற்றுவீர் மெய்ம்மை யேயு ணர்திரேல்
ஊனு றக்க போகமு முமக்கெ னக்கு மொக்குமே. 325

ஓடு கின்ற ஐம்புலன் ஒடுங்க அஞ்செ ழுத்துளே
நாடு கின்ற நான்மறை நவிலு கின்ற ஞானிகாள்!
கூடு கின்ற கண்டித குணங்கள் மூன்றெ ழுத்துளே
ஆடு கின்ற பாவையா யமைந்த தேசி வாயமே. 326

புவன சக்க ரத்துளே பூத நாத வெளியிலே
பொங்கு தீப அங்கியுள் பொதிந்தெ ழுந்த வாயுவைத்
தவன சோம ரிருவருந் தாமி யங்கும் வாசலில்
தண்டு மாறி யேறிநின்ற சரச மான வெளியிலே. 327

மவுன அஞ்செ ழுத்திலே வாசி யேறி மெள்ளவே
வானளாய் நிறைந்த சோதி மண்ட லம்பு குந்தபின்
அவனு நானு மெய்கலந் தனுப வித்த அளவிலே
அவனு முண்டு நானுமில்லை யாரு மில்லை யானதே. 328

வாளுறையில் வாள டக்கம் வாயுறையில் வாய்வ டக்கம்
ஆளுறையில் ஆள டக்கம் அருமை என்ன வித்தைகாண்!
தாளு றையில் தாளடக்கம் தன்மை யான தன்மையும்
நாளு றையில் நாளடக்கம் நானு நீயுங் கண்டதே. 329

வழுத்தி டான ழித்திடான் மாய ரூப மாகிடான்
கழுன்றி டான்வெ குண்டிடான் கால கால காலமும்
துவண்டி டான சைந்திடான் தூய தூப மாகிடான்
சுவன்றி டானு ரைத்திடான் சூட்ச சூட்ச சூட்சமே. 330

ஆகி கூவென் றேயுரைத்த அட்ச ரத்தி னுனைந்தம்
யோகியோகி யென்பர் கோடி யுற்ற றிந்து கண்டிடார்;
பூகமாய் மனக்கு ரங்கு பொங்கு மங்கு மிங்குமாய்
ஏக மேக மாகவே யிருப்பர் கோடி கோடியே. 331

கோடி கோடி கோடி கோடி குவலயத்தோ ராதியை
நாடி நாடி நாடி நாடி நாளகன்று வீணதாய்த்
தேடித் தேடித் தேடித் தேடித் தேகமுங் கசங்கி ய
கூடிக் கூடிக் கூடிக் கூடி நிற்பர்கோடி கோடியே. 332

கருத்தி லான்வெ ளுத்திலான் பரனி ருந்த காரணம்
ஒருத்தி லானொ ளித்திலா னொன்றி ரண்டு மாகிலான்
ஒருத்தி லான்ம ரித்திலா னெழிந்தி டான மிழ்ந்திடான்
கருத்திற் கீயுங் கூவுமுற்றேன் கண்ட றிந்த வாதியே. 333

வாதி வாதி வாதி வாதி வண்டலை யறிந்திடான்
ஊதி யூதி யூதி யூதி யொளிமழுங்கி யுளறுவான்
வீதி வீதி வீதி வீதி விடையெருப் புரக்குவோன்
சாதி சாதி சாதி சாதி சாகரத்தைக் கண்டிடான். 334

ஆண்மை யாண்மை யாண்மை யாண்மை ஆண்மை கூறுமசடரே!
காண்மை யான வாதி ரூபங் காலகால காலமும்
பாண்மை யாகி மோன மான பாசமாகி நின்றிடும்
நாண்மை யான நரலை வாயில் நங்குமிங்கு மங்குமே. 335

மிங்கு வென்ற அட்சரத்தின் மீட்டு வாகிக் கூவுடன்
துங்க மாகச் சோமனோடு சோமன் மாறி நின்றிடும்;
அங்க மாமு னைச்சுழியி லாகு மேக வாகையாய்க்
கங்கு லற்றுக் கியான முற்றுக் காணுவாய் சுடரொளி.

சுடரெ ழும்பும் சூட்சமும் சுழுமு னையின் சூட்சமும்
அடரெ ழும்பி யேகமாக அமர்ந்து நின்ற சூட்சமுந்
திடர தான சூட்சமுந் திரியின் வாலை சூட்சமுங்
கடலெ ழும்பு சூட்சமுங் கண்ட றிந்தோன் ஞானியே. 337

ஞானி ஞானி என்றுரைத்த நாய்கள் கோடி கோடியே;
வானி லாத மழைநானென்ற வாதி கோடி கோடியே;
தானி லான சாகரத்தின் தன்மை காணு மூடர்கள்
மூனி லாமற் கோடிகோடி முன்ன றிந்த தென்பரே. 338

சூட்ச மான கொம்பிலே சுழுமு னைச்சு டரிலே
வீச்ச மான வீயிலே விபுலை தங்கும் வாயிலே
கூச்ச மான கொம்பிலே குடியி ருந்த கோவிலே
தீட்சை யான தீவிலே சிறந்த தேசி வாயமே. 339

பொங்கி நின்ற மோனமும் பொதிந்து நின்ற மோனமுந்
தங்கி நின்ற மோனமுந் தயங்கி நின்ற மோனமுங்
கங்கை யான மோனமுங் கதித்து நின்ற மோனமுந்
திங்க ளான மோனமுஞ் சிவனி ருந்த மோனமே. 340

மோன மான வீதியில் முனைச்சு ழியில் வாலையில்
பான மான வீதியில் பசைந்த செஞ்சு டரினில்
ஞான மான மூலையில் நரலை தங்கும் வாயிலில்
ஓன மான செஞ்சுட ருதித்த தேசி வாயமே. 341

உதித்தெ ழுந்த வாலையு முயங்கி நின்ற வாலையுங்
கதித்தெ ழுந்த வாலையுங் காலை யான வாலையும்
மதித்தெ ழுந்த வாலையு மறைந்து நின்ற ஞானமுங்
கொதித்தெ ழுந்து கும்பலாகி ஹவும் ஹீயு மானதே.

கூவுங்கியு மோன மாகி கொள்கை யான கொள்கையை
மூவிலே யுதித்தெ ழுந்த முச்சு டர்வி ரிவிலே
பூவிலே நறைகள் போலப் பொருந்தி நின்ற பூரணம்
ஆவி யாவி யாவி யாவி யன்பருள்ள முற்றதே. 343

ஆண்மை கூறு மாந்தரே! அருக்க ஞேடும் வீதியைக்
காண்மை யாகக் காண்பிரே கசட றுக்க வல்லிரே
தூண்மை யான வாநி சூட்சஞ் சோபமாகு மாகுமே.
நாண்மை யான வாயிலில் நடித்து நின்ற நாதமே. 344

நாத மான வாயிலில் நடித்து நின்ற சாயலில்
வேத மான வீதியில் விரிந்த முச்சு டரிலே
ஓத மான ஓயிலே கிளர்ந்து நின்ற கூவிலே
பூத மான வாயி லேப்பு கலறிவ ஞதியே. 345

ஆவி யாவி யாவி யாவி ஐந்துகொம்பி னுவியே
மேவி மேவி மேவி மேவி மேதினியின் மானிடர்
வாவி வாவி வாவி வாவி வண்டற்க வறிந்திடார்
பாவி பாவி பாவி பாவி படியிலுற்ற மாந்தரே. 346

வித்திலே முளைத்த சோதி வில்வளையின் மத்தியில்
முத்திலே யொளிவ தாகி மோன மான தீபமே
நத்தி லோதி ரச்சி போன்ற நாதனை யறிந்திடார்
வத்திலே கிடந்து மூன்ற வாலையான சூட்சமே. 347

வாலை யோடு காலையும் வடிந்து பொங்கு மோனமே
மாலையோடு காலை யான வாற றிந்த மாந்தரே!
மூலை யான கோணமின் முளைத்தெ ழுந்த முச்சுடர்
தாலை யோடு பானகன் று தங்கி நின்ற மோனமே. 348

மோன மான வீதியில் முடுகி நின்ற நாதமே
ஈன மின்றி வேகமான வேக மென்ன வேகமே
கான மான மூலையிற் கனிந்தி ருந்த வாலையில்
ஞான மான செஞ்சுடர் நடந்த தேசி வாயமே. 349

உச்சி மத்தி வீதியி லொழிந்தி ருந்த சாதியிற்
பச்சி யுற்ற சோமனும் பரந்து நின்று லாவவே
செச்சி யான தீபமே தியான மான மோனமே
கச்சி யான மோனமே கடந்த தேசி வாயமே. 350

அஞ்சு கொம்பி னின்ற நாத மாலைமே லெழும்பியே
பிஞ்சி னூடு பூமலர்ந்து பெற்றி யுற்ற சுத்தமே
செஞ்சுட ருதித்த போது தேசி கன்சு மூன்றுடன்
பஞ்ச பூத மானதே பரந்து நின்ற மோனமே. 351

சடுதி யான கொம்பிலே தத்து வத்தின் ஹ்ரீயிலே
அடுதி யான ஆவிலே அரனி ருந்த ஹௌவிலே
இடுதி யென்ற சோலையி லிருந்த முச்சு டரிலே
நடுதி யென்று நாத மோடி நன்குற அமைந்ததே. 352

அமைய மான மோனமும் அரனி ருந்த மோனமும்
சமை[illegible] பூத மோனமுந் தரித்தி ருந்த மோனமும்
இமை[illegible] கொண்ட வேகமும் இலங்கு முச்சி மோனமும்
தமைய றிந்த மாந்தரே சடத்தை யுற்று நோக்கிலார். 353

பாய்ச்ச லூர்வ ழியிலே பரனி ருந்த சுழியிலே
காய்ச்ச கொம்பி னுனியிலே கனியி ருந்த மலையிலே
வீச்ச மான தேதடா விரிவு தங்கு மிங்குமே
மூச்சி னேடு மூச்சை வாங்கு முட்டிநின்ற சோதியே. 354

சோதி சோதி யென்று நாடித் தோற்பவர் சிலவரே ;
ஆதி ஆதி யென்று நாடு மாடவர் சிலவரே ;
வாதி வாதி யென்று சொல்லும் வம்பருஞ் சிலவரே ;
நீதி நீதி நீதி நீதி நின்றிடு முழுச்சுடர். 355

சுடர தாகி யெழும்பி யங்குத் தூபமான காலமே
இடரதாய்ப் புவியும் விண்ணு மேக மாய மைக்கமுன்
படரதாக நின்ற வாதி பஞ்ச பூத மாகியே
அடர தாக அண்ட மெங்கு மாண்மையாகி நின்றதே. 356

நின்றி ருந்த சோதியை நிலத்தி லுற்ற மானிடர்
கண்ட றிந்து கண்கு ளிர்ந்து காதலுற் றுலாவுவோர்
கண்ட முற்ற மேன்முனையின் காட்சி தன்னைக் காணுவார்
நன்றி யற்று நரலை பொங்கி நாதமும் மகிழ்ந்திடும். 357

வயங்கு மோனச் செஞ்சுடர் வடிந்த சோதி நாதமும்
கயங்கள் போலக் கதறியே கருவூ ரற்ற வெளியிலே
பயங்கொ டின்றி யின்றியே படர்ந்து நின்ற பான்மையே
நயங்கள் கோவென் றேநடுங்கி நங்கை யான தீபமே. 358

தீப வுச்ச முனையிலே திவாக ரத்தின் சுழியிலே
கோப மாறு கூவிலே கொதித்து நின்ற தீயிலே
தாப மான மூலையிற் சமைந்து நின்ற சூட்சமுஞ்
சாப மான மோட்சமுந் தடித்து நின்றி லங்குமே. 359

தேசி கன்சு ழன்றதே திரிமு னையின் வாலையில்
வேச மோடு வாலையில் வியனி ருந்த மூலையில்
நேச சந்தி ரோதயம் நிறைந்தி ருந்த வாயிலில்
வீசி வீசி நின்றதே விரிந்து நின்ற மோனமே. 360

உட்கமல மோன மீதி லுயங்கி நின்ற நந்தியை
விக்கலோடு கியு மாகி வில்வ ளூவின் மத்தியில்
முட்டிபொ திந்த தென்னவே முடுகி நின்ற செஞ்சுடர்
கட்சு வைகள் போலவுங் கடிந்து நின்ற காட்சியே. 361

உந்தி யிற்சு ழிவழியி லுச்சி யுற்ற மத்தியிற்
சந்திரன்ற னொளிக் கிரணந் தாண்டி நின்ற செஞ்சுடர்
பந்தமாக வில்வ ளூயிற் பஞ்ச பூத விஞ்சையாங்
கிந்து போலக் கியில்நின்று கிச்சு முச்சு வென்றதே. 362

செச்சை யென்ற மூச்சி னோடு சிகாரமும் வகாரமும்
பச்சை யாகி நின்றதே பரவெ ளியின் பான்மையே
இச்சை யான ஹிலேயிருந்தெ ழுந்த ஹீயிலே
உச்சி யான கோணத்தி லுதித்த தேசி வாயமே. 363

ஆறு மூலைக் கோணத்தி லமைந்த வொன்ப தாத்திலே
நாறு மென்று நங்கை யான நாவியுந் தெரிந்திடக்
கூறு மென்று ஐவரங்குக் கொண்டு நின்ற மோனமே
பாறு கொண்டு நின்றது பறந்த தேசி வாயமே. 364

பறந்ததோ கறந்த போது பாய்ச்ச லூரின் வழியிலே
பிறந்ததே பிராண னன்றிப் பெண்ணு மாணு மல்லவே.
துறந்த தோசி றந்ததோ தூய துங்க மானதோ?
இறந்த போதி லன்றிசு இலங்கி டுஞ்சி வாயமே. 365

அருளி ருந்த வெளியிலே அருக்க னின்ற இருளிலே
பொருளி ருந்த சுழியிலே புரண்டெ ழுந்த வழியிலே
தெருளி ருந்த கலையிலே தியங்கி நின்ற வலையிலே
குருவி ருந்த வழியினின்று ஹவும் ஹீயு மானதே. 366

ஆன தோரெ ழுத்திலே அமைந்து நின்ற ஆதியே
கான மோடு தால மீதிற் கண்டறிவ தில்லையே
தானுந் தானு மானதே சமைந்த வாலை காலையில்
வேன லோடு மாறுபோல் விரிந்த தேசி வாயமே. 367

ஆறு கொண்ட வாரியு மமைந்து நின்ற தெய்வமுந்
தூறு கொண்ட மாரியுந் துலங்கி நின்ற தூபமும்
வீறு கொண்ட மோனமும் விளங்கு முட்க மலமும்
மாறு கொண்ட ஹுவிலே மடிந்த தேசி வாயமே. 368

வாயில் கொண்ட கோணமில் வயங்கு மைவர் வைகியே
சாயல் கண்டு சார்ந்ததுந் தலைமன் ஞரு றைந்ததுங்
காய வண்டு கண்டதுங் கருவூ ரங்குச் சென்றதும்
பாயு மென்று சென்றதும் பறந்த தேசி வாயமே. 369

பறந்ததே துறந்த போது பாய்ச்ச லூரின் வழியிலே
மறந்ததே கவ்வு முற்ற வாணர் கையின் மேவியே
பிறந்ததே யிறந்த போதிற் பீடி டாமற் கீயிலே
சிறந்து நின்ற மோனமே தெளிந்த தேசி வாயமே. 370

வடிவு பற்ப வாசனத் திருத்தி மூல வனலையே
மாரு தத்தி னுலெழுப்பி வாச லைந்து நாலையும்
முடிவு முத்தி ரைப்படுத்தி மூல வீணுத் தண்டினுல்
முளரி யால யங்கடந்து மூல நாடி யூடுபோய். 371

அடிது வக்கி முடியளவு மாறு மாநி லங்கடந்
தப்புறத்தில் வெளிக டந்த ஆதி யெங்கள் சோதியை
உடுப திக்க ணமுதருந்தி யுண்மை ஞான உவகையுள்
உச்சி பட்டி றங்குகின்ற யோகி நல்ல யோகியே. 372

மந்தி ரங்க ளுண்டுநீர் மயங்கு கின்ற மானிடர்
மந்தி ரங்க ளாவதும் மறத்தி லூற லன்றுகாண்
மந்தி ரங்க ளாவது மதித்தெ ழுந்த வாயுவை
மந்தி ரத்தை யுண்ட வர்க்கு மரண மேது மில்லையே. 373

மந்தி ரங்கள் கற்றுநீர் மயங்கு கின்ற மாந்தரே!
மந்தி ரங்கள் கற்றநீர் மரித்த போது சொல்விரோ?
மந்தி ரங்க ளும்முளே மதித்த நீறு மும்முளே;
மந்தி ரங்க ளாவது மனத்தி னைந்தெ ழுத்துமே. 374

ஓரெ ழுத்தி லிங்கமா யோது மட்ச ரத்துளே
ஓரெ ழுத்தி யங்கு கின்ற வுண்மையை யறிகிலீர் ;
மூவெ ழுத்து மூவராய் முளைத்தெ ழுந்த சோதியை
நாவெ ழுத்து நாவுளே நவின்ற தேசி வாயமே. 375

முத்தி சுத்தி தொந்தமா முயங்கு கின்ற மூர்த்தியை
மற்று தித்த ஐம்பு லன்க ளாகு மத்தி மப்புலன்
அத்தர் நித்தர் காள கண்ட ரன்பிஞ லனுதினம்
உச்ச ரித்து ளத்திலே யறிந்து ணர்ந்து கொண்மினே. 376

மூன்றி ரண்டு மைந்துமாய் முயன்றெ ழுந்த தேவராய்
மூன்றி ரண்டு மைந்ததாய் முயன்ற தேயு லகெலாம்
ஈன்ற தாயு மப்பனு மியங்கு கின்ற நாதமாய்த்
தோன்று மோரெ ழுத்திஞேடு சொல்ல ஒன்று மில்லையே.

வெளியுருக்கி யஞ்செ ழுத்தும் விந்து நாத சந்தமுந்
தளியுருக்கு நெய்க லந்து சகல சத்தி யானதும்
வெளியி லும்மவ் வினையிலு மிருவ ரைய றிந்தபின்
தெளிக லந்த தன்மையால் தெளிந்த தேசி வாயமே. 378

முப்பு ரத்தி லப்புரம் முக்க ணன்வி னையிலே
சிற்ப ரத்து ளூற்பனஞ் சிவாய மஞ்செ ழுத்துமாந்
தற்பர முதித்து நின்று தாஞு வெங்கு மானபின்
இப்புற மொடுங்கு மோடி யெங்கும் லிங்க மானதே. 379

ஆடி நின்ற சீவஞே ரஞ்சு பஞ்ச பூதமோ?
கூடி நின்ற சோதியோ? குலாவி நின்ற மூலமோ?
நாடு கண்டு நின்றதோ? நாவு கற்ற கல்வியோ?
வீடு கண்டு விண்டிடின் வெட்ட. வெளியு மானதே. 380

உருத்தரித்த போது சீவன் ஓங்க நின்ற வுண்மையுந்
திருத்த முள்ள தொன்றிலுஞ் சிவாய மஞ்செ ழுத்துமாம்
மிருத்துநின் றுருத்த டங்கி யேக போக மானபின்
கருத்தி னின்று தித்ததே கபால மேந்து நாதனே. 381

கருத்தரித் துதித்த போது கமல பீட மானதுங்
கருத்தரித் துதித்த போது கார ணங்க ளானதுங்
கருத்தரித் துதித்த போது காணி ரண்டு கண்களாய்க்
கருத்தி னின் று தித்ததே கபால மேந்து நாதனே. 382

ஆன வன்னி முன்று கோண மாறிரண்டும் எட்டிலே
ஆன சீவ னஞ்செழுத் தகார மிட்ட லர்ந்ததும்
ஆன சோதி யுண்மையும் அனாதி யான வுண்மையும்
ஆன தான தானதா யவல மாய்ம றைந்திடும். 383

ஈன்றெ ழுந்த வெம்பிரான் இருவ ரங்க வெளியிலே
நான்ற பாம்பின் வாயினால் நாலு திக்கு மாயினான் ;
மூன்று மூன்று வளையமாய் முப்பு ரங்க டந்தபின்
ஈன்றெ ழுந்த அவ்வினைசை யெங்கு மாகி நின்றதே. 384

எங்கு மெங்கு மொன்றலோவீ ரேழு லோக மொன்றலோ?
அங்கு மிங்கு மொன்றலோ அனாதி யான தொன்றலோ ?
தங்கு தாப ரங்களுந் தரித்து வார தொன்றலோ ?
உங்க ளெங்கள் பங்கினி லுதித்த தேசி வாயமே. 385

அம்ப ரத்தி லாடுஞ்சோதி யான வன்னி மூலமாம்
அம்ப ரம்முந் தம்பரமும் அகோர மிட்ட லர்ந்ததும்
அம்ப ரக்கு ழியிலே அங்க மிட்டு ருக்கிட..
அம்ப ரத்தி லாதியோ டமர்ந்த தேசி வாயமே. 386

வாடி லாத பூம லர்ந்து வண்டுரிசை நாவிலே
ஓடி நின்று ருவெடுத் துகார மாய லர்ந்ததும்
ஆடி யாடி யங்கமு மகப்ப டக்க டந்தபின்
கூடி நின்று லாவுமே குருவி ருந்த கோலமே. 387

விட்டடி விரைத்த தோவவ் வேரு ருக்கி நின்றதோ ?
எட்டி நின்ற சீவனுமீ ரேழு லோகங் கண்டதோ ?
தட்டுருவ மாகி நின்ற சதாசி வத்தொ ளியதோ!
வட்டவீ டறிந்த பேர்கள் வான தேவ ராவரே. 388

வானவர் நிறைந்த சோதி மானி டக்க ருவிலே
வான தேவ ரத்தனைக்குள் வந்த டைவர் வானவர்
வான கம்மு மண்ண கம்மும் வட்டவீ ட.றிந்தபின்
வானெலா நிறைந்.து மன் னு மாணிக் கங்க ளானதே. 389

பன்னி ரண்டு கால்நிறுத்திப் பஞ்ச வண்ண முற்றிடின்
மின்னியே வெளிக்கு ணின் று வேறி டத்த மர்ந்ததுஞ்
சென்னி யாந்த லத்திலே சீவ னின்றி யங்கிடும்
பன்னி யுன்னி யாய்ந்த வர்ப ரப்பிரம மானதே. 390

உச்சி கண்டு கண்கள்கூட்டி யுண்மை கண்ட தெவ்விடம்?
மச்சு மாளி கைக்குளே மானி டங்க லப்பிரேல்
எச்சி லான வாசலு மேக போக மாய்விடும்
பச்சை மாலு மீசனும் பரந்த தேசி வாயமே. 391

வாயி லிட்டு நல்லுரிசை யட்ச ரத்தொ ளியிலே
கோயி லிட்டு வாவி யும்மங் கொம்பிலே யுலர்ந்ததும்
ஆயி லிட்ட காயமு மனுதி யிட்ட சிவனும்
வாயு விட்ட வன்னியும் வளர்ந்த தேசி வாயமே. 392

அட்ச ரத்தை யுச்சரித் தனுதி யங்கி மூலமாய்
அட்ச ரத்தை யுந்தி றந்த கோரமிட் டலர்ந்ததும்
அட்ச ரத்தி லுட்கர மகப்படக்க டந்தபின்
அட்ச ரத்தி லாதியோ டமர்ந்த தேசி வாயமே. 393

கோயி லுங்கு ளங்களுங் குளியி னிற்கு ருக்களாய்
மாயி லும்ம டியிலு மனத்தி லேம யங்குறீர்;
ஆயனை யரனை யும்அ றிந்து ணர்ந்து கொள்விரேல்
தாயினுந் தகப்ப னோடு தான மர்ந்த தொக்குமே. 394

கோயி லெங்கும் ஒன்றலோ? குளங்க ணீர்கள் ஒன்றலோ?
தேயு வாயு ஒன்றலோ? சிவனு மங்கே ஒன்றலோ?
ஆய சீவ னெங்குமா யமர்ந்து வார தொன்றலோ?
காய மீத றிந்தபேர்கள் காட்சி யாவர் காணுமே. 395

காது கண்கள் மூக்குவாய் கலந்து வார தொன்றலோ?
சோதி யிட்டெ டுத்ததுஞ் சுகங்க ளஞ்சு மொன்றலோ?
ஓதி வைத்த சாத்திர முதித்து வார தொன்றலோ?
நாதவீ டறிந்த பேர்க ளுதை ராவர் காணுமே. 396

அவ்வு தித்த அட்ச ரத்தி னுட்கலந்த அட்சரம்
சவ்வு தித்த மந்திரஞ் சம்ப வத்தி ருந்ததால்
மவ்வு தித்த மாய்கையால் மயங்கு கின்ற மாந்தர்காள்!
உவ்வு தித்த தவ்வுமா யுருத்த ரித்த வுண்மையே. 397

அகார மென்னு மக்க ரத்தி லக்கர மொழிந்ததோ?
அகார மென்னு மக்கரத்தி லவ்வு வந்து தித்ததோ?
உகார மும்ம காரமு மொன்றி நன்று நின்றவோ?
விகார மற்ற ஞானிகாள்! விரித்து ரைக்க வேணுமே. 398

சத்தி யாவ துன்னுடல்; தயங்கு சீவ னுட்சிவம்;
பித்தர் காளி தற்குமேல் பிதற்று கின்ற தில்லையே.
சுத்தி யைந்து கூடமொன்று சொல்லிறந்த தோர்வெளி
சத்தி சிவமு மாகிநின்று தண்மை யாவ துண்மையே. 399

சுக்கி லத்து ளையிலே சுரோணி தக்க ருவுளே
முச்ச துர வாசல் தன்னில் முளைத்தெ ழுந்த மோட்டினில்
மெய்ச்ச துர மெய்யு ளேவி ளங்கு ஞான தீபமாய்
உச்ச ரிக்கு மந்திரம் ஓம்ந மச்சி வாயமே. 400

அக்கர மனாதி யல்ல; ஆத்து மம்ம னாதியல்;
புக்கி ருந்த பூதமும் புலன்க ளும்அ னாதியல்;
தக்க மிக்க நூல்களுஞ் சாத்தி ரம்அ னாதியல்;
ஒக்க நின்று டன்கலந்த உண்மை காண்அ னாதியே. 401

மென்மை யாகி நின்றதேது விட்டு நின்று தொட்டதே
துண்மை யாக நீயுரைக்க வேணு மெங்க ளுத்தமா!
பெண்மை யாகி நின்ற தொன்று விட்டுநின்று தொட்டதை
உண்மையா யுரைக்க முத்தி யுட்க லந்தி ருந்ததே. 402

அடக்கி னால டங்குமோ அண்ட மஞ்செ ழுத்துளே?
உடக்கின லெடுத்த காய முண்மை யென்று ணர்ந்துநீ
சடக்கி லாது வேதமுந் தரிக்க வோதி லாமையால்
விடக்கு நாயு மாயவோதி வேறு வேறு பேசுமோ? 403

உண்மை யான சக்கரம் உபாய மாயி ருந்ததுந்
தண்மை யான காயமுந் தரித்த ரூப மானதும்
வெண்மை யாகி நீறியே விளைந்து நின்ற தானதும்
உண்மை யான ஞானிகாள்! விரித்து ரைக்க வேணுமே.

எள்ள கத்தி லெண்ணெய்போல வெங்கு மாகியெம்பிரான்
உள்ள கத்தி லேயிருக்க ஊச லாடு மூடர்காள்!
கொள்ளை பட்ட வாலினைக் குணக்கெ டுக்க வல்லிரேல்
கள்ள லாகி நின்றசோதி காண லாகு மெய்ம்மையே. 405

வேணு மென்ற ஞானமும் விரும்பு கின்ற நூலிலே
தாணு வுண்டங் கென்கிறீர் தரிக்கி லீர்ம றக்கிலீர்
தாணு வொன்று மூலநாடி தன்னுள் நாடி யும்முளே
காணு மன்றி வேறியாவுங் கனும யக்க மொக்குமே. 406

வழக்கி லேயு ரைக்கிறீர் மனத்து ளேத விக்கிறீர்;
உழக்கி லாது நாழியான வாறு போலு மூமைகாள்!
உழக்கு நாலு நாழியான வாறு போலு மும்முளே
வழக்கி லேயு ரைக்கிறீர் மனத்து ளீசன் மன்னுமே. 407

அறத்தி றங்க ளுக்குநீ அண்ட மெண்டி சைக்கும்நீ
திறத்தி றங்க ளுக்குநீ தேடு வார்கள் சிந்தைநீ
உறக்கும் நீஉ ணர்வும்நீ உட்க லந்த சோதிநீ
மறக்கொ ணாத நின்கழல் மறப்பி னுங்கு டிகொளே. 408

ஆடுகின்ற எம்பி ரானை யங்கு மிங்கு நின்றுநீர்
தேடு கின்ற வீணர்காள்! தெளிவ தொன்றை ஓர்கிலீர்;
நாடி நாடி யும்முளே நவின்று நோக்க வல்லிரேல்
கூடொ ணாத தற்பரங் குவிந்து கூட லாகுமே. 409

சுத்தி யைந்து கூடமொன்று சொல்லி றந்த தோர்வெளி
சத்தியுஞ் சிவமு மாகி நின்ற தன்மை யோர்கிலீர் ;
சத்தி யாவ தும்முடல்; தயங்கு சீவ னுட்சிவம் ;
பித்தர் காள்! அ றிந்துகொண்ம் பிரானி ருந்த கோலமே. 410

அகார மான தம்பலம் அனாதி யான தம்பலம்
உகார மான தம்பலம் உண்மை யான தம்பலம்
மகார மான தம்பலம் வடிவ மான தம்பலஞ்
சிகார மான தம்பலம் தெளிந்த தேசி வாயமே. 411

சக்கரம் பறந்த தோடிச் சக்க ரம்மேல் பலகையாய்ச்
செக்கி லாடு மெண்ணெய்போலச் சிங்கு வாயு தேயுவும்
உக்கி லேயொ ளிகலங் குகங்க ளுங்க லக்கமாய்ப்
புக்கிலே புகுந்த போது போன வாற தெங்ஙனே? 412

வளர்ந்தெ ழுந்த கொங்கைதன்னை மாய மாமென் றெண்ணிநீர்
வளங்கொள் சீவ ராமுடம்பை உண்மை யாகத் தேர்வீர்காள் !
விளங்கு ஞான மேவியேநீர் மிக்கோர் சொல்லைக் கேட்பீரேல்
களங்க மற்று நெஞ்சுளே கருத்து வந்து புக்குமே. 413

நாலு வேத மோது கின்ற ஞானமொன் றறிவீரோ ?
நாலு சாம மாகியே நவின்ற ஞான போதமாய்
ஆல முண்ட கண்டனும் அயனு மந்த மாலுமாய்ச்
சால வுன்னி நெஞ்சுளே தரித்த தேசி வாயமே. 414

சுற்ற மென்று சொல்வதுஞ் சுருதி முடிவில் வைத்திடீர் ;
அத்த னித்த மாடியே அமர்ந்தி ருந்த தெவ்விடம் ?
பத்தி முற்றி யன்பர்கள் பரத்தி லொன்று பாழது ;
பித்த ரே! இ தைக்கருதிப் பேச லாவ தெங்கனே ? 415

எங்க னேவி ளக்கதுக் கேற்ற வாறு ணின்றுதான்
எங்க னேயெ ழுந்தருளி யீச னேச ரென்பரேல்
அங்க னேயி ருந்தருளும் ஆதி யான தற்பரம்;
சிங்க மண்மி யானைபோல் திரிம லங்க ளற்றதே. 416

அற்ற வுள்ள கத்தையும் அலகி டும்மெ ழுக்கிடும்
மெத்த தீப மிட்ட திற்ப்ர வாத பூசை யேத்தியே
நற்றவம் புரிந்தும் ஏக நாதர் பாதம் நாடியே
கற்றி ருப்ப தேசரிதை கண்டு கொள்ளு மும்முளே. 417

பார்த்து நின்ற தம்பலம் ; பரம னுடு மம்பலம் ;
கூத்து நின்ற தம்பலம் ; கோர மான தம்பலம் ;
வார்த்தை யான தம்பலம் ; வன்னி யான தம்பலம் ;
சீற்ற மான தம்பலந் தெளிந்த தேசி வாயமே. 418

சென்று சென்றி டந்தொறும் சிறந்த செம்பொ னம்பலம்
அன்று மின்று நின்றதோ ரனுதி யான தம்பலம்
என்று மென்றி ருப்பதோர் இறுதியான அம்பலம்
ஒன்றி யொன்றி நின்றது ளொழிந்த தேசி வாயமே. 419

தந்தை தாய்த மரும்நீ சகல தேவ தையும்நீ
சிந்தை நீதெ ளிவுநீ சித்தி முத்தி தானும்நீ
விந்து நீவி ளைவுநீ மேல தாய வேதம்நீ
எந்தை நீஇ றைவனீ என்னை யாண்ட ஈசனே ! 420

எப்பிறப்பி லும்பிறந் திறந்த ழிந்த ஏழைகாள் !
இப்பி றப்பி லும்பிறந் தென்னை நீறு பூசுறீர் ?
அப்புடன் மலம றுத்தே ஆசை நீக்க வல்லிரேல்
செப்பு நாத வோசையிற் றெளிந்து காண லாகுமே. 421

மந்தி ரங்கள் கற்றுநீர் மயங்கு கின்ற மாந்தரே !
மந்தி ரங்கள் கற்றுநீர் மரித்த போது சொல்விரோ ?
மந்தி ரங்கள் உம்முளே மதித்த நீறு மும்முளே ;
மந்தி ரங்க ளாவது மனத்தி லைந்தெ ழுத்துமே. 422

எட்டி யோக மானதும் இயங்கு கின்ற நாதமும்
எட்டு வக்க ரத்துளே உகார மும்ம காரமும்
விட்ட லந்த மந்திரம் வீணைத் தண்டி னூடுபோய்
அட்ட வக்க ரத்துளே யமர்ந்த தேசி வாயமே. 423

பிரான்பி ரான்பி ரானென்று பினத்து கின்ற மூடரே !
பிரானை விட்டு மெம்பிரான் பிரிந்த வாற தெங்ஙனே ?
பிரானு மாப்பி ரானுமாய்ப் பேரு லகந் தானுமாய்ப்
பிரானிலே முளைந்தெ ழுந்த பித்தர் காணு மும்முடல். 424

ஆதியில்லை அந்த மில்லை ஆன நாலு வேதமில்;
சோதி யில்லை சொல்லுமில்லை சொல்லி றந்த தூவெளி ;
நீதி யில்லை நேச மில்லை நிச்சயப் படாததும்
ஆதி கண்டு கொண்டபின் னஞ்செ ழுந்து மில்லையே. 425

அம்மை யப்ப னப்பனீ ரமர்ந்த போத றிகிலீர்
அம்மை யப்ப னைநீ ராதி யான பாசமே
அம்மை யப்ப னின்னை யன்றி யாரு மில்லை யானபின்
அம்மை யப்ப னின்னை யன்றி யாரு மில்லை யில்லையே. 426

நூறு கோடி மந்திரம் நூறு கோடி யாகமம்
நூறு கோடி நாளி ருந்து டாடினு மென்பயன் ?
ஆறு மாறு மாறுமா யகத்தி லோரெ ழுத்ததாய்ச்
சீரை யோத வல்லிரேல் சிவப தங்கள் சேரலாம். 427

மூந்த வோரெ ழுத்துளே முளைத்தெ ழுந்த செஞ்சுடர்
அந்த வோரெ ழுத்துளே பிறந்து காய மானதும்
அந்த வோரெ ழுத்துளே யனேக மாகி நின்றதும்
அந்த வோரெ ழுத்தையு மறிந்து ணர்ந்து கொள்ளுமே. 428

கூட்ட மிட்டு நீங்களுங் கூடி வேத மோதுறீர்;
ஏட்ட கத்து ளீசனு மிருப்ப தென்னெ ழுத்துளே ;
நாட்ட மிட்டு நாடிடு நாலு மூன்று தன்னுளே
ஆட்ட கத்து ளாடிடு மம்மை யாணை யுண்மையே. 429

காக்கை மூக்கை யாமையா ரெடுத்து ரைத்த காரணம்
நாக்கை யூன்றி யுள்வளைத்து ஞான நாடி யூடுபோய்
ஏக்கை நோக்க அட்சர மிரண்டெ ழுத்து மேத்திடிற்
பார்த்த பார்த்த திக்கெலாம் பரப்பி ரம்ம மானதே. 430

கொள்ளொ ணாது குவிக்கொ ணாது கோதறக் குலைக்கொணா
தள்ளொ ணாது அணுகொ ணாது ஆதி மூல மானதைத்
தெள்ளொ ணாது தெளியொ ணாது சிற்பரத்தி னுட்பயன்
விள்ளொ ணாத பொருளையான் விளம்பு மாற தெங்ஙனே?

ஓசை யுள்ள கல்லைநீர் உடைத்தி ரண்டு செய்துமே
வாசலிற் பதித்த கல்லை மழுங்க வேமி திக்கிறீர் ;
பூச னைக்கு வைத்த கல்லில் பூவும்நீருஞ் சார்த்துறீர் ;
ஈச னுக் குகந்த கல்ல தெந்தக் கல்லு சொல்லுமே. 432

ஓட்டு வைத்துக் கட்டினி ருபாய மான மந்திரம்;
கட்டுப் பட்ட போதிலுங் கருதத னங்கு வாழுமோ ?
எட்டு மெட்டு மெட்டுளே யியங்கு கின்ற வாயுவை
வட்ட மிட்ட யவ்விலே வைத்து ணர்ந்து பாருமே. 433

இந்த வூரி லில்லையென் றெங்கு நாடி யோடுறீர் ?
அந்த வூரி லீசனு மமர்ந்து வாழ்வ தெங்ஙனே ?
அந்த மான பொந்தி லாரில் மேவிநின்ற நாதனை
அந்த மான சீயிலவ்வி லறிந்து ணர்ந்து கொள்ளுமே. 434

புக்கி ருந்த தும்முளே பூரி யிட்ட தோத்திரம்
தொக்குச் சட்சு சிங்குவை யாக்கி ராணன் சூழ்ந்திடில்
அக்கு மணியும் கொன்றை சூடி அம்ப லத்து ளாடுவார்
மிக்க சோதி யன்புடன் விளம்பி டாது பின்னையே. 435

பின்னெ ழுந்த மாங்கி சத்தைப் பேதையர்கண் பற்றியே
பின்பு மாங்கி சத்தில் போக பேதமாய்கை பண்ணினல்
துன்பு றும்வி னைகள்தாம் சூழ்ந்தி டும்பி னென்றலோ
அன்பரா யிருந்த பேர்க ளாறு நீந்தல் போல்விரே. 436

விட்டி ருந்த தும்முளே விதன மற்றி ருக்கிறீர் ;
கட்டி வைத்த வாசல் மூன்று காட்சியான வாசலொன்று
கட்டிவை வத்த வாசலுங் கதவு தாள்தி றந்துபோய்த்
திட்ட மான வீசனைத் தெளியு மாங்கி சத்துளே. 437

ஆகு மாகு மாகுமே அனாதி யான அப்பொருள் ;
ஏகர் பாதம் நாடிநாடி யேத்தி நிற்க வல்லிரேல்
பாகுசேர் மொழியு மைக்குப் பால ஞகி வாழலாம் ;
வாகு டன்னீர் வன்னியை மருவி யேவ ருந்திடீர். 438

உண்மை யான தொன்ற தொன்றை யுற்றுநோக்கி யும்முளே
வண்மை யான வாசியுண்டு வாழ்த்தி யேத்த வல்லிரேல்
தண்மை பெற்றி ருக்கலாம் தவமும் வந்து நேரிடும் ;
கன்ம தன்ம மாகுமீசர் காட்சி தானுங் காணுமே. 439

பால ஞக வேணுமென்று பத்தி முற்று மென்பதே
நாலு பாத முண்டதில் நனைந்தி ரண்ட டுத்ததால்
மூல நாடி தன்னில்வன்னி மூடி யந்த நீருண
ஏலவார் குழலி யூடே யீசர் பாத மெய்துமே. 440

எய்து நின்னை யன்பிஞ லிறைஞ்சி யேத்த வல்லிரேல்
எய்து முண்மை தன்னிலே யிறப்பி றப்ப கற்றிடும் ;
மையி லங்கு கண்ணிபங்கன் வாசி வானி லேறிமுன்
செய்த வல்வி னைகளுஞ் சிதறு மஃது திண்ணமே. 441

திண்ண மென்று சேதி சொன்ன செவ்வியோர்கள் கேண்மினே
அண்ண லன்பு ளன்புருகி யறிந்து நோக்க லாயிடும்
மண்ணு மதிர விண்ணு மதிர வாசியை நடத்திடில்
நண்ணி யெங்க ளீசனும் நமது டல்லி ருப்பனே. 442

இருப்பனெட்டெட் டெண்ணிலே இருந்து வேற தாகுவன்
நெருப்பு வாயு நீருமண்ணும் நீள்வி சும்பு மாகுவன்
கருப்பு குந்து காலமே கலந்த சோதி நாதனைக்
குருப்பு னலில் மூழ்கினுர் குறித்து ணர்ந்து கொள்வரே. 443

கொள்ளு வார்கள் சிந்தையிற் குறிப்பு ணர்ந்த ஞானிகள் ;
விள்ளு வார்கள் பக்குவத்தில் வேண்டி வேண்டி யேத்தினல்
உள்ளு மாய்ப்பு றம்புமா யுணர்வ தற்கு ணர்வுமாய்த்
தெள்ளி தாகி நின்ற சோதி செம்மையைத் தெளிந்திடே.

தெளிந்துநற் சரியை தன்னில் சென்று சாலோ கம்பெறும்;
தெளிந்தநற் கிரியை பூசை சேர லாஞ்சா மீபமே;
தெளிந்த நல்லி யோகந்தன்னில் சேர லாகுஞ் சாரூபம்;
தெளிந்த ஞானம் நான்கிலும் சேர லாஞ்சா யுச்யமே. 445

சேரு வார்கள் ஞான மென்று செப்புவார் தெளிவுளோர்;
சேரு வார்கள் நாலு பாதச் செம்மையென்ற தில்லையே;
சேரு வார்கள் சிவகதி திருவ ருளைப் பெற்றபேர்;
சேரு மாறு கண்டு நாலுஞ் செய்தொழில் திடப்படே. 446

திறம லிக்கு நாலு பாதஞ் செம்மையுந் திறப்படார்
அறிவிலிகள் தேச நாடி அவத்தி லேய லைவதே;
குறியதனைக் காட்டி யுட்கு றித்து நோக்க வல்லிரேல்
வெறிகமழ் சடையு டையோன் மெய்ப்ப தம்ம டைவிரே.

அடைவு ளோர்கள் முத்தியை யறிந்தி டாத மூடரே!
படை யுடைய தத்துவமும் பாத கங்க ளல்லவோ?
மடைதி றக்க வாரியின் மடையி லேறு மாறுபோல்
உடலில் மூல நாடியை யுயர வேற்றி யூன்றிடே. 448

ஊன்றி யேற்றி மண்டல முருவி மூன்று தாள்திறந்
தான்று தந்தி யேறிடில் லமுதம் வந்தி றங்கிடும்;
நான்றி தென்று தொண்ட ருக்கு நாதனும் வெளிப்படும்;
ஆன்றியு முயிர்ப ரம்பொ ருந்தி வாழ்வ தாகவே. 449

ஆக மூல நாடியி லனலெ ழுப்பி யன்புடன்
மோக மான மாயையில் முயல்வ தும்மொ ழிந்திடில்
தாக மேரு நாடி யேக னேகமான வாறுபோல்
ஏகர் பாத மன்புட னிறைஞ்சி ஞர றிவரே. 450

அறிந்து நோக்கி யும்முளே யயன்தி யான மும்முளே
பிறந்தி ரும லேகர் பாதம் பெற்றிருப்ப துண்மையே;
அறிந்து மீள வைத்திடா வகையு மாண மேத்திஞர்
செறிந்து மேலை வாசலைத் திறந்து பாரு மும்முளே. 451

சேதி யாக வும்முளே தெளிந்து நோக்க வல்லிரேல்
சோதி வந்து தித்திடுந் துரியா தீத முற்றிடும்;
ஆதி சக்க ரத்திலி லமர்ந்து தீர்த்த மாடுவன்
பேதி யாது கண்டுகொள் பிராண னைத்தி ருத்தியே. 452

திருவு மாகிச் சிவனு மாகித் தெளிந்து ளோர்கள் சிந்தையில்
மருவிலே யெழுந்து வீசும் வாச னைய தாகுவன்;
கருவிலே விழுந்தெ ழுந்த கன்ம வாத னையெலாம்
பருதிமுன் னிருள தாகிப் பறியு மங்குப் பாருமே. 453

பாரு மெந்தை யீசன் வைத்த பண்பிலே யிருந்துநீர்;
சேருமே நடுவ றிந்து செம்மை யான அப்பொருள்;
வேரை யும்மு டியையும் விரைந்து தேடி மாலயன்
பாரி டந்து விண்ணிலே பறந்துங் கண்ட தில்லையே. 454

கண்டிலா தயன்மா லென்று காட்சி யாகச் சொல்கிறீர்;
மண்டி னுல ரனுடன் மேவ லாயி ருக்குமோ?
தொண்டு பட்டு மன்புடன் தொழுது நோக்க வல்லிரேல்
பண்டு முப்பு ரம்மெரித்த பத்தி வந்து முற்றுமே. 455

முற்றுமே யவனொ ழிந்து முன்பி னொன்று காண்கிலே;
பற்றி லாத தொன்று தன்னைப் பற்றிநிற்க வல்லது
கற்றி லாத வீசர் பாதங் காணலா யிருக்குமோ?
பெற்ற பேரை யன்புடன் பிரிய மாகக் கேளுமே. 456

கேட்டு நின்ற வுன்னிலை கிடைத்த காலந் தன்னுளே
வாட்ட முள்ள தத்துவ மயக்க மும்ம கற்றிடும்;
வீட்டிலே வெளிய தாகும் விளங்க வந்து நேரிடும்;
கூட்டி வன்னி மாருதங் குயத்தை விட்டெ முப்புமே. 457

எழுப்பி மூல நாடியை யிதப்ப டுத்த லாகுமே;
மழுப்பி லாத சபையைநீர் வலித்து வாங்க வல்லிரேல்;
சுழுத்தி யுங்க டந்துபோய்ச் சொப்ப னத்தி லப்புறம்
அழுத்தி யோரெ ழுத்துளே யமைப்ப துண்மை யையனே! 458

அல்ல தில்லை யென்றுதா னுவி யும்பொ ருளுடல்
நல்ல வீசர் தாளி ணைக்கும் நாதனுக்கு மீந்திலை
எல்லு மென்னுள் நேசமும் வாசி யைவ ருந்தினுல்
தொல்லை யாம்வி னைவி டென்று தூரதூர மானதே. 459

ஆன தேப நியதுயி ரற்ற தேப சுபாசம்
போனதே மலங்க ளும்பு லன்க ளும்வி னைகளும்
கான கத்தி லிட்ட தியிற் காற்றுவந் தடுத்தலோ
ஊன கத்தில் வாயு வன்னி யொன்றியே யுலாவுமே. 460

உலாவு முவ்வு மவ்வுமா யுதித்த டர்ந்து நின்றதும்
உலாவி யைம்பு லன்களு மொருத லத்தி ருந்திடும்
நிலாவு மங்கு நேசமாகி நின்ற மிர்த முண்டுதாங்
குலாவு மெங்க ளிசனைக் குறித்து ணர்ந்து சூம்பிடே. 461

சூம்பி டுங்க ருத்துளே குகனை யைங்க ரனையும்
நம்பி யேயி டம்வலம் நமக்க ரித்து நாடிட
எம்பி ரானு மம்மையு மிருத்தி யோக டுவணைத்
தும்பி போல வாசகந் தொடர்ந்து சோம்பி நீங்குமே. 462

நீங்கு மைம்பு லன்களும் நிறைந்த வல்வி னைகளும்
ஆங்கா ரம்மா மாசையு மருந்த டர்ந்த பாவமும்
ஓங்கா ரத்தி னுள்ளி ருந்த ஒன்பதொழிந் தொன்றிலத்
தூங்க வீசர் சொற்படி துணிந்தி ருக்க கத்தமே. 463

நினைப்ப தொன்று கண்டிலே னிய லாது வேறிலை ;
நினைப்பு மாய்ம றப்புமாய் நின்ற மாய்கை மாய்கையே ;
அனைத்து மாய கண்டமா யனுதி முன்ன னுதியாய்
நினக்குள் நானெ னக்குள்நீ நினைக்கு மாற தெங்ஙனே? 464

கருக்க லந்த காலமே கண்டு நின்ற காரணம்;
உருக்க லந்த போதலோ வுன்னை நானு ணர்ந்தது?
விரிக்கி லென்ம றைக்கிலென் வினைக்கி சைந்த போதெலாம்
உருக்க லந்து நின்றபோது நீயும் நானு மொன்றலோ? 465

ஞான நூல்கள் தேடியே நவின்ற ஞான யோகிகாள்!
ஞான மான சோதியை நாடி யுள்ள றிகிலீர்;
ஞான மாகி நின்றதோர் நாத னைய றிந்தபின்
ஞான மல்ல தில்லைவேறு நாமு ரைத்த துண்மையே. 466

கருத்த ரிப்ப தற்குமுன் காயம் நின்ற தெவ்விடம்?
உருத்த ரிப்ப தற்குமுன் உயிர்ப்பு நின்ற தெவ்விடம்?
மருட்பொ திந்த சிந்தையில் மயக்கம் நின்ற தெவ்விடம்?
விருப்பு ணர்ந்த ஞானிகாள்! விரித்து ரைக்க வேணுமே.

கருவி னிற்க ருவதா யெடுத்த வேழு தோற்றமும்
இருவி னைப்ப யத்தினால் பிறந்தி றந்து மூன்றிடும்
மறுவினைப் பிறவி மூன்று கால மும்வ குத்தபின்
உறுவினைப் பயனி தென்று ணர்ந்த ஞானி சொல்லுமே.

வாயி லெச்சில் போகவே நீர்கு டித்துத் துப்புவீர்;
வாயிருக்க எச்சில் போன வாயி லென்ப தெவ்விடம்?
வாயி லெச்சி லல்லவோ நீரு ரைத்த மந்திரம்?
நாயினை யறிந்த போது நாடு மெச்சி லேதுகொல்? 469

தொடக்க தென்று நீர்விழத் தொடங்கு கின்ற வூமர்காள்!
தொடக்கி ருந்த தெவ்விடம்? சுத்தி யான தெவ்விடம்?
தொடக்கி ருந்த வாறறிந்து சுத்தி பண்ண வல்லிரேல்
தொட.க்கி லாத சோதியைத் தொடர்ந்து காண லாகுமே.

மேதி யோடும் ஆவுமே விரும்பி யேயு ணர்ந்திடில்
சாதி பேத மாயுருத் தரிக்கு மாறு போலவே
வேத மோது வானுடன் புலைச்சி சென்று மேவிடில்
பேதமாய்ப் பிறக்கி லாத வாற தென்ன? பேசுமே. 471

வகைக்கு லங்கள் பேசியே வழக்கு ரைக்கு மாந்தர்காள்!
தொகைக்கு லங்க ளான நேர்மை நாடியே யுணர்ந்தபின்
மிகைத்த சுக்ல மன்றியே வேறு மொன்று கண்டிலீர். 472

* * *

ஓதும் நாலு வேதமு முரைத்த சாத்தி ரங்களும்
பூத தத்து வங்களும் பொருந்து மாக மங்களும்
சாதி பேத வுண்மையுந் தயங்கு கின்ற நூல்களும்
பேத பேத மாகியே பிறந்து முன்றி ருந்தவே. 473

உறங்கிலென் விழிக்கிலென் உணர்வு சென்றொ டுங்கிலென்?
திறம்பி லென்றி கைக்கிலென் சிலதி சைக ளேட்டிலென்?
புறம்பு முள்ளு மெங்கணும் பொதிந்தி ருந்த தேகமாய்
நிறைந்தி ருந்த ஞானிகள் நினைப்ப தேது மில்லையே. 474

அங்க லிங்கம் பூண்டுநீ ரகண்ட பூசை செய்கிறீர்;
அங்க லிங்கம் பூண்டுநீ ரமர்ந்தி ருந்த மார்பரே!
எங்கு மோடி யெங்கு மெங்கும் ஈடழிந்து மாய்கிறீர்;
செங்கல் செம்பு கல்லெலாஞ் சிறந்து பார்க்கு மூடரே! 475

தீட்டந் தீட்ட மென்று நீரில் தினமுழுகு மூடரே!
தீட்ட மாகி யல்லவோ திரண்டு காய மானதும்?
பூட்ட காய மும்முளே புகழு கின்ற பேயரே!
தீட்ட வந்து கொண்டலோ தெளிந்த தேசி வாயமே. 476

மூல நாடி தம்முளே முளைத்தெ ழுந்த வாயுவை
நாளு நாளு மும்முளே நடுவி ருத்த வல்லிரேல்
பால னுகு மும்முடல் பறந்து போக லாய்விடும்;
ஆல முண்ட கண்டர்பாத மம்மை பாத முண்மையே. 477

உந்தி மேலே நாலும் மூன்றும் ஓம்நமசி வாயமாம்;
சந்தி சந்தி யென்றுநீர் சாற்று கின்ற பேயரே!
முந்த வந்து நும்முளே மூல நாடி யூடுபோய்
அந்தி சந்தி யற்றிட மறிந்து ணர்ந்து பாருமே. 478

வன்னி மூன்று தீயினில் வாழு மெங்கள் நாதனும்
கன்னி யான துள்ளிருக்கக் காதல் கொண்ட தெவ்விடம்?
சென்னி நாலு கையி ரண்டு சிந்தையி லிரண்டிலோன்
றுன்னி யுன்னி யும்முளே யுய்த்து ணர்ந்து பாருமே. 479

தொண்டு செய்து நீங்களுஞ் சூல வோடி மாள்கிறீர் ;
உண்டு மூன்று நும்முளே யுற்று ணர்ந்து பார்க்கிலீர் ;
வண்டு லாவு சோலை சூழ வாழுமெங்கள் நாதனும்
பண்டு போல நும்முளே பகுத்தி ருப்ப னீசனே. 480

அரியதோர் நமச்சி வாய மாதி யந்த மானதும்
ஆறி ரண்டு நூறு கோடி யளவிடாத மந்திரம்
தெரிய நாலு வேத மாறு சாத்திர புராணமும்
தேடு மாலு மயனுஞ் சர்வ தேவதேவ தேவனே. 481

பரமுனக்கெ னக்கு வேறு பயமு மில்லை பாகையால்
கரமு னக்கு நித்தமுங் குவித்தி டக்க டமையாம் ;
சிரமு ருக்கி யமுதளித்த சிரு லாவு நாதனே !
உரமெ னக்கு நீயளித்த வுண்மை யுண்மை யுண்மையே. 482

மூல வட்ட மீதிலே முளைத்த வைந்தெ ழுத்திலே
கோல வட்ட மூன்றுமாய்க் குளிர்ந்த லர்ந்து நின்றதீ
ஞால வட்ட மன்றுளே நவின்ற ஞானி மேலதாய்
ஏல வட்ட மாகியே யிருந்த தேசி வாயமே. 483

என்ன கத்தி லென்னைநா னெங்கு மோடி நாடினேன் ;
என்ன கத்தி லென்னை யன்றி ஏதுமொன்று கண்டிலேன் ;
மின்னெ ழும்பி விண்ண கத்தின் மின்னொடுங்கு மாறுபோல்
என்ன கத்து ளீசனே டியானு மல்ல தில்லையே. 484

நாலு வேத மோது கின்ற ஞானமொன் றறிவிரோ ?
நாலு சாம மாகிய நவின்ற ஞான போதமாய்
ஆல முண்ட கண்டனு மயனு மந்த மாலுமாய்ச்
சால வுன்னி நெஞ்சிலே தரித்த தேசி வாயமே. 485

முச்சதுர மூல மாகி மூன்ற தான பேதமாய்
அச்சதுர மும்மு ளேய டங்கி வாசி யோகமாய்
மெய்ச்சதுர மெய்யு ளேவி ளங்கு ஞான தீபமாய்
உச்ச ரித்த மந்திரம் ஓம்ந மச்சி வாயமே. 486

மூன்று மண்ட லத்துளேயோர் முச்சதுர மாயமாய்
நாலு வாச லென்விரலி னடுவு தித்த மந்திரங்
கோலி யொன்று மைந்துமாய்க் குளிர்ந்த லர்ந்து நின்றநீ
மேலு மேலு நாடினேன் விளைந்த தேசி வாயமே. 487

இடங்கள் பண்ணி சுத்திசெய்தே யிட்ட பீட மீதிலே
அடங்க நீரும் பூசல்செய் தருந்த வங்கள் பண்ணுவீர்;
ஒடுங்கி நின்ற நாதனு ருதிக்கு ஞான மெவ்விடம்?
அடங்கு கின்றதெவ்விடம்? அறிந்து பூசை செய்யுமே. 488

புத்த கங்க ளைச்சுமந்து பொய்க ளைப்பி தற்றுவீர்;
செத்திடம் பிறந்தி டம்ம தெங்ங னென்ற றிகிலீர்;
அத்த னைய சித்தனை யறிந்து நோக்க வல்லிரேல்
உத்த மத்து ளாயசோதி யுணரும் போக மாகுமே. 489

அருளிலே பிறந்து தித்து மாயை ரூப மாகிய
இருளிலே தயங்கு கின்ற ஏழை மாந்தர் கேண்மினோ:
பொருளிலே தவம்புனைந்து பொருந்தி நோக்க வல்லிரேல்
மருள தேது வன்னியின் மறைந்த தேசி வாயமே. 490

கருக்க லந்த காலமே கண்டி ருந்த காரணா!
உருக்க லந்த போதலோ வுன்னை யான றிந்தனன்?
திருக்க லந்த சோதியைத் தெளிந்தி யான றிந்தபின்
இருக்கி லேனி றக்கிலே னிரண்டு மற்றி ருந்ததே. 491

தன்ம சிந்தை யாளவுந் தவம றியாத் தன்மையாய்க்
கன்ம சிந்தை வெயிலு மூன்று கருத்தழிந்த கசடரே!
சென்ம சென்மந் தேடியுந் தெளியொ ணாத செல்வனை
வன்மை யாக வும்முளே நயந்து காண வேண்டுமே. 492

கள்ள வுள்ள மேயிருக்கக் கடந்த ஞான மோதுவீர்!
கள்ள முள்ள றுத்த போது கதியி தன்றிக் காண்கிலீர்;
உள்ளமே விளக்கி நித்த மொளியை யணுக வல்லிரேல்
தெள்ளு ஞான மும்முளே சிறந்த தேசி வாயமே. 493

காண வேண்டு மென்றுநீர் கடன்ம லைக ளேறுவீர் ;
ஆண வம்மலை தல்லவோ அறிவி லாத மாந்தரே !
வேணு மென்றவ் வீசர் பாத மெய்யுளே தரிப்பிரேல்
தாணு வாக நின்ற சிவன் ருன்சிவம தாகுமே. 494

அணுவி னோட கண்ட மா யளவி டாத சோதியைக்
குணம தாக வும்முளே குறித்து நோக்கின் முத்தியாம் ;
மிணமிணென்று விரலை யெண்ணி மீளொணு மயக்கமாய்த்
துணிவி லாத படியினுற் றொடர்ந்து பூசை செய்குவீர். 495

எச்சி லெச்சி லென்றுநீ ரிடைந்தி ருக்கு மேழைகாள்!
துச்சி லெச்சி லல்லவோ தூய காய மானதும் ?
வைச்ச வெச்சில் தேனலோ வண்டி னெச்சில் பூவலோ?
கைச்சு தாவில் வைத்துடன் கறந்த பாலு மெச்சிலே. 496

தீர்த்த லிங்க மூர்த்தி யென்று தேடியோடுந் தீதரே !
தீர்த்த லிங்க முள்ளி நின்ற சிவனைத் தெளியுமே ;
தீர்த்த லிங்க மும்முளே தெளிந்து காண வல்லிரேல்
தீர்த்த லிங்கந் தானதாய்ச் சிறந்த தேசி வாயமே. 497

ஆடு கொண்டு கூடுசெய் தமர்ந்தி ருக்கு மாறுபோல்
தேடு கின்ற செம்பினைத் திடப்ப டப்ப ரப்பியே
நாடு கின்ற தம்பி ரானு நம்முளே யிருக்கவே
போடு தர்ப்ப பூசையென்னும் பூசை யென்ன பூசையே?

என்னை யற்ப நேரமு மிறக்கி லாத நாதனே !
ஏக னே!இ றைவனே ! இராச ராச ராசனே!
உன்னை யற்ப நேரமு மொழிந்தி ருக்க லாகுமே?
உனது நாம மெனதுநாவி லுதவி செய்க வீசனே ! 499

எல்லை யற்று நின்ற சோதி யேகமா யெரிக்கவே
வல்ல பூர ணப்ரகாச யோக போக மாகியே
நல்ல வின்ப மோன சாக ரத்திலே யழுத்தியே
நாடொ ணுத வமிர்த முண்டு நானழிந்து நின்றநாள். 500

ஆன வாற தாயிடு மகண்ட மான சோதியை
ஊனக் காட்டி யும்முளே யுகந்து காண வல்லிரேல்
ஊன காய மாளலா முலக பார மாளலாம்;
வான நாடு மாளலாம்; வண்ண நாட ராணையே. 501

நித்த லும்ம ணிதுலக்கி நீடு மூலை புக்கிருந்து
கத்தி யேக தறியே கண்கள் மூடி என்பயன்?
எத்த னைபே ரெண்ணினு மெட்டி ரண்டும் பத்தலோ?
அத்த னுக்கி தேற்குமோ அறிவி லாத மாந்தரே! 502

எட்டி ரண்டுங் கூடியேயி லிங்க மான தேவனை
மட்ட தாக வும்முளே மதித்து நோக்க வல்லிரேல்
கட்ட மான பிறவியென் கருங்க டல்க டக்கலாம்
இட்ட மான ஒளியிநே டிசைந்தி ருப்பீர் காண்மினே.

உண்மை யான மந்திரம் ஒளியி லேயி ருந்திடும்;
தண்மை யான மந்திரஞ் சமைந்த ரூப மாகியே
வெண்மை யான மந்திரம் விளைந்து நீற தானதே
உண்மை யான மந்திரம தொன்று மேசி வாயமே. 504

பன்னி ரண்டு நாளிருத்திப் பஞ்ச வன்ன மொத்திட
மின்னி யவ்வெ ளிக்கு ணின்று வேரெடுத் தமர்ந்தது
சென்னி யான தலத்திலே சீவ னின்றி யங்கிடும்
பன்னி யுன்னி யாய்ந்தவர் பரப்பி ரம்ம மாவரே. 505

நச்சி வாயி லுச்சிமே லாயி ரந்த லங்களாய்
முச்சுடரு மூவி ரண்டு மூண்டெ முந்த தீச்சுடர்
வச்சி ரம்ம தாகியே வளர்ந்து நின்ற தெவ்விடம்?
இச்சுடரு மிந்தி யம்மு மேக மான தெங்ஙனே? 506

முத்தி சித்தி தொந்தமாய் முயங்கு கின்ற மூர்த்தியை
மற்று தித்த வைம்புலன்க ளாகு மத்தி மப்புலன்
அத்த னித்த காள் கண்ட ரன்பினு லனுதினம்
உச்ச ரித்து ளத்திலே யறிந்து ணர்ந்து கொண்மினே. 507

அண்ண லார ளுதியா யனாதி முன்ன ளுதியாய்ப்
பெண்ணு மாணு மொன்றலோ பிறப்ப தற்கு முன்னெலாம்?
கண்ணி லாணில் சுக்கிலங் கருத்தொ டுங்கி நின்றபின்
மண்ணு ளோரும் விண்ணு ளோரும் வந்தவாற தெங்ஙனே? 508

எத்தி சைக்கு மெவ்வுயிர்க்கு மெங்க ளப்ப னெம்பிரான்
முத்தி ஞான வித்துளே முளைத்தெ ழுந்த செஞ்சுடர்
சித்தினிற் றெளிந்த போது தேவர் கோயிற் சேர்ந்தனன்
அத்த னுடல் கண்டபோ தடங்கி யாட லுற்றதே. 509

வல்ல வாச லொன்பதும் மருத்த டைத்த வாசலும்
சொல்லும் வாச லோரைந்துஞ் சொல்ல விம்மி நின்றதும்
நல்ல வாச லைத்திறந்து ஞான வாச லூடுபோய்
எல்லை வாசல் கண்டபின் இனிப்பி றப்ப தில்லையே. 510

ஆதி யான தொன்றுமே அநேக ரூப மாயமாய்ப்
பேதா பேத மாயெழுந்து சருவ சீவ னானபின்
ஆதி யோடு கூடுமீண்டெ ழுந்து சன்ம மானபின்
சோதி யான ஞானி யாருஞ் சுத்தமா யிருப்பரே. 511

வண்டுபூ மணங்க ளோடு வந்தி ருந்த தேனெலாம்
உண்டுளே யடங்கு வண்ண மோது லிங்க மூலமாய்க்
கண்டு கண்டு வேரிலே கருத்தொ டுங்க வல்லிரேல்
பண்டு கொண்ட வல்வினை பறந்தி டுஞ்சி வாயமே. 512

ஓரெழுத்தி லிங்க மாக வோது மக்க ரத்துளே
ஓரெ ழுத்தி யங்கு கின்ற வுண்மையை யறிகிலீர்;
மூவெ ழுத்தும் மூவராய் முளைத்தெ ழுந்த சோதியை
நாவெ ழுத்து நாவுளே நவின்ற தேசி வாயமே. 513

தூர தூர தூரமுந் தொடர்ந்தெ ழுந்த தூரமும்
பார பார மென்றுமே பரிந்தி ருந்த பாவிகாள்!
நேர நேர நேரமு நினைந்தி ருக்க வல்லிரேல்
தூர தூர தூரமுந் தொடர்ந்து கூட லாகுமே. 514

சூண்ட லங்கள் பூண்டுநீர் குளங்க டோறுஞ் சூழ்கிறீர்;
மண்டு கங்கள் போலநீர் மனத்தின் மாச றுக்கிலீர்;
மண்டை யேந்து கையரை மனத்தி ருத்த வல்லிரேல்
பண்டை மால யன்றொழப் பணிந்து வாழ லாகுமே. 515

கூடு கட்டி முட்டையிட்டுக் கொண்டி ருந்த வாறுபோல்
ஆடி ரண்டு கன்றை யீன்ற வம்பலத்து ளாடுதே;
மாடு கொண்டு வெண்ணெ யுண்ணு மாளிடப்பசுக்களே!
வீடு கண்டு கொண்ட பின்பு வெட்டவெளி காணுமே.

உள்ள தோபு றம்பதோ வுயிர்ப்ப டங்கி நின்றிடும்?
மெள்ள வந்து கிட்டநீர் வினவ வேண்டு மென்கிறீர்;
உள்ள தும்பு றம்பதும் ஒத்த போது நாதமாம்;
கள்ள வாச லைத்திறந்து காண வேண்டு மாந்தரே! 517

நட்ட கல்லைத் தெய்வமென்று நாலு புட்பஞ் சாத்தியே
சுற்றி வந்து முணமுணென்று சொல்லு மந்த்ர மேதடா!
நட்ட கல்லும் பேசுமோ நாத னுள்ளி ருக்கையில்?
சுட்ட சட்டி சட்டுவங் கறிச்சு வைய றியுமோ? 518

# பட்டினத்தார் பாடல்

## பட்டினத்தார் வரலாற்றுச் சுருக்கம்:



சோழ நன்னாட்டிலுள்ள காவிரிப்பூம்பட்டினத்தில், குபேரர் திருவெண்காடர் என்னும் **பட்டினத்துப் பிள்ளையா**ராய் அவதரித்துச் செல்வராயிருந்தனர். இவர் மணம் முடித்தும் புத்திரனில்லாமல் வருந்தினர்.

பரமசிவனார் ஒரு குழந்தை வடிவமாய்த் திருவிடைமருதூர் உத்தியான வனத்தில் வில்வ மரத்தடியில் இருந்தனர். வறியராயிருந்த **சிவசருமரு**ம், அவர் மனைவியாரும் அக்குழந்தையை எடுத்து வந்து, பட்டினத்துப் பிள்ளையாரிடம் கொடுத்து, நிரம்பப் பொருள் பெற்றுச் சென்றனர்.

குழந்தையாகிய பரமசிவனார் **மருதப்பிரான்** என்னும் பெயரிடப் பெற்று வளர்ந்து, பதினாறு வயதில், தந்தையாரில்லாத சமயத்தில், தாயாரிடம் வந்து, 'காதற்ற ஊசியும் வாராது காணுங் கடைவழிக்கே,' என்னும் வாக்கியமெழுதிய ஓர் ஓலை நறுக்கையும், காதற்ற ஓர் ஊசியையும் ஒரு பெட்டியில் வைத்துத் தாழிட்டு, அதைத் தாயாரிடங் கொடுத்து, 'இதை என் தந்தையார் வந்தவுடன் கொடுக்கக்கடவீர்,' என்று சொல்லி மறைந்து போயினர்.

பட்டினத்துப்பிள்ளையார் வந்தவுடன் அம்மையார் அதை இவரிடம் கொடுக்க, இவர் அப்

பெட்டியைத் திறந்து, காதற்றவூசியையும் ஓலை நறுக்கையுங்கண்டு, ஞானோதயமெய்தி, 'இது வரையிலும் நமக்குத் திருமகனாராயிருந்தவர் பரம சிவனாரே!'. என்றுணர்ந்து, தமது செல்வப் பொருளைப் பலருக்கும் சூறையிடும்படி தம் தலைமைக்காரியஸ்தராகிய **சேந்தனாருக்குக்** கட்டளையிட்டு, துறவு பூண்டு, அவ்வூரிற்பிச்சை யெடுத்துண்டு காலங்கழித்தனர்.

இதைக்கண்டு இவர் சுற்றத்தார் வருந்துகையில், இவர் தமக்கையார் இவர் இறத்தல் நல்லதென வெறுத்து, நஞ்சு கலந்த ஒட்டப்பம் ஒன்று சுட்டுத்தர, பட்டினத்தார், 'தன்வினை தன்னைச் சுடும்; ஒட்டப்பம் வீட்டைச்சுடும்,' என்று சொல்லி, அவ்வப்பத்தைக் கொடுத்தவர் வீட்டிற் செருகி, அவ்வீட்டை எரித்து, பின்பு தம் தாயார் இறந்தமையால், சுடுகாடு சென்று, சில பாடல்களைப்பாடி, தமது ஞானக்கினியால் அவருடலைத் தகித்து, திருவிடைமருதூர் சென்று, பின்னர்த் திருவாரூரடைந்து, அங்கு இறந்தவனைப் பிழைப்பித்து, கொங்கு நாட்டின் சிவஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டு, துளுவநாடு புகுந்து **பத்திரகிரி** அரசருக்கு ஞானோபதேசம் செய்து, திருவெண்காட்டுக்குச் சென்று, அங்குத் தம் தலைமைக்காரியஸ்தராகிய சேந்தனாரைச் சிறையினின்று மீட்டு, **சிதம்பரம், திருக்காளத்தி** முதலிய தலங்களுக்குச் சென்று சிவபிரானைப் பாடிப் பணிந்து, திருவொற்றியூர் வந்து, சிவலிங்கமாயினர்.

சென்னையைச் சார்ந்த திருவொற்றியூர்க் கடற்கரையோரத்தில் இப்பொழுது இவர் பெயரால் ஓர் ஆலயஞ் சமைக்கப்பட்டிருக்கின்றது.

# திருப்பாடற்றிரட்டு

முதலாவது

## கோயிற்றிருவகவல்

திருச்சிற்றம்பலம்

நிலைமண்டில ஆசிரியப்பா

நினைமின் மனனே! நினைமின் மனனே!
சிவபெரு மானைச் செம்பொனம் பலவனை
நினைமின் மனனே! நினைமின் மனனே!
அலகைத் தேரின் அலமரு காலின்
உலகப்பொய் வாழ்க்கையை யுடலையோம் பற்க ;
பிறந்தன இறக்கும்; இறந்தன பிறக்கும்;
தோன்றின மறையும்; மறைந்தன தோன்றும்;
பெருத்தன சிறுக்கும்; சிறுத்தன பெருக்கும்;
உணர்ந்தன மறக்கும்; மறந்தன வுணரும்;
புணர்ந்தன பிரியும்; பிரிந்தன புணரும்;
அருந்தின மலமாம்; புனைந்தன அழுக்காம்;
உவப்பன வெறுப்பாம்; வெறுப்பன வுவப்பாம்;
என்றிவ்வ யனைத்தும் உணர்ந்தனை யன்றியும்,
பிறந்தன பிறந்தன பிறவிக டோறும்
கொன்றனை யனைத்தும்; அனைத்துநினைக் கொன்றன,
தின்றனை யனைத்தும், அனைத்துநினைத் தின்றன;
பெற்றனை யனைத்தும்; அனைத்துநினைப் பெற்றன;
ஓம்பினை யனைத்தும்; அனைத்துநினை யோம்பின;
செல்வத்துக் களித்தனை; தரித்திரத் தழுங்கினை;
சுவர்க்கத் திருந்தனை; நரகிற் கிடந்தனை;
இன்பமுந் துன்பமும் இருநிலத் தருந்தினை;
ஒன்றொன் றொழியா துற்றனை; அன்றியும்,
புற்புதக் குரம்பை துச்சி லொதுக்கிடம்

என்னநின் றியங்கும் இருவினைக் கூட்டைக்
கல்லினும் வலிதாக் கருதினை ; இதனுள்
பீளையும் நீரும் புறப்படும் ஒருபொறி ;
மீளுங் குறும்பி வெளிப்படும் ஒருபொறி ;
சளியும் நீருந் தவழும் ஒருபொறி ;
உமிழ்நீர் கோழை ஒழுகும் ஒருபொறி ;
வளியும் மலமும் வழங்கும் ஒருவழி ;
சலமும் சீயுஞ் சரியும் ஒருவழி ;
உள்ளுறத் தொடங்கி வெளிப்பட நாறுஞ்
சட்டகம் முடிவிற் சுட்டெலும் பாகும் ;
உடலுறு வாழ்க்கையை உள்ளுறத் தேர்ந்து
கடிமலர்க் கொன்றைச் சடைமுடிக் கடவுளை
ஒழிவருஞ் சிவபெரும் போகவின் பத்தை
நிழலெனக் கட்வா நீர்மையொடு பொருந்தி
எனதற நினைவற இருவினை மலமற
வரவொடு செலவற மருளற இருளற
இரவொடு பகலற இகபரம் அறவொரு
முதல்வனைத் தில்லையுள் முளைத்தெழுஞ் சோதியை
அம்பலத் தரசனை ஆனந்தக் கூத்தனை
நெருப்பினி லரக்கென நெக்குநெக் குருகித்
திருச்சிற் றம்பலத் தொளிருஞ் சிவனை
நினைமின் மனனே ! நினைமின் மனனே !
சிவபெரு மானைச் செம்பொனம் பலவனை
நினைமின் மனனே ! நினைமின் மனனே !

திருச்சிற்றம்பலம்

சகளாதி தங்கடந்து களாதி தத்தில்
சாதித்தேன் தன்மனமாய்ச் சார்ந்து போச்சு;
பகலிருளில் லாதவெளிக் கப்பா லாச்சு;
பந்தமற்ற மாமோட்சப் பதம்பெற் றேனே. 30

பெற்றதனைச் சொல்லிவிட்டேன் வடநூல் பாடை
பிரித்துமுப்பத் தொன்றினிலே பிரம ஞானம்
தத்துவத்தைச் சொல்லிவைத்தேன் யோகி யானல்
சாதனைசெய் வானறிவான் சைதன் யத்தில்
முத்தியடை வானதிலே நிருத்தஞ் செய்வான்
மும்மூட்சுத் துவமறிந்த மூர்த்தி யாவான்
நித்யமெனு முபநிடதப் பொருள்தான் சொல்லும்
நிலவரத்தால் யோகநிட்டை நிறைந்து முற்றே. 31



# காகபுசுண்டர் காவியம்

---

## காப்பு:

எண்சீர் விருத்தம்

கணபதியே அடியாகி அகில மாகிக்
காரணத்தின் குருவாகிக் காட்சி யாகிக்
குணபதியே கொங்கைமின்னாள் வெள்ளை ஞானக்
குருநிலையாய் அருள்விளங்குங் கொம்பே ஞானக்
கனவினிலும் நினைவினிலும் ஒளியாய் நின்ற
காரணத்தின் வடிவாகிக் கருத்துள் ளாகிப்
பணியரவம் பூண்டசிவ வாசி நேர்மை
பாடுகின்றேன் காவியந்தா னெண்ணிப் பாரே.

## நூல்:

எண்ணியெண்ணிக் காவியத்தை யெடுத்துப் பாராய்;
எந்நேரங் காமசிந்தை யிதுவே நோக்கும்
பண்ணிபன்றி பலகுட்டி போட்டா லென்ன,
பதியானைக் குட்டியொரு குட்டி யாமோ?
சண்ணியுண்ணி யிந்நூலை நன்றாய்ப் பாரு
சக்கரமு மக்கரமும் நன்றாய்த் தோணும்;
தண்ணிதண்ணி யென்றலைந்தால் தாகம் போமோ?
சாத்திரத்தி லேபுகட்டித் தள்ளி யேறே. 1

புகட்டினாள் தசதீட்சை மகிமை தன்னைப்
பூரிப்பா லெனக்களித்தே அகண்டந் தோறும்
சகட்டினாள் சகலசித்து மாடச் சொன்னாள்
சந்திரபுட் கரணிதனில் தானஞ் சொன்னாள்

பகட்டிஞ ஞலகமெல்லாம் முக்கோ ணத்திற்
பரஞான சிவபோதம் பண்பாய்ச் சொன்ஞள்
அகட்டிஞ வைவர்களை யீன்ரு ளம்மன்
அந்தருமை சொல்லவினி அடியான் கேளே. 2

கேளப்பா ஈசஞெரு காலந் தன்னிற்
கிருபையுடன் சபைகூடி யிருக்கும் போது
வாளப்பா மாலயன்றம் முகத்தை நோக்கி,
'வந்தவா றெவ்வகையோ சென்ற தேதோ?
கோளப்பா செயகால லயந்தா னெங்கே?
குருநமசி வாயமெங்கே? நீங்க ளெங்கே?
ஆளப்பா ஐவர்களு மொடுக்க மெங்கே?
அறுத்தெனக்கு இன்னவகை யுரைசெய் வீரே.' 3

இன்னவகை ஈசரவர் கேட்கும் போதில்
எல்லோரும் வாய்மூடி யிருந்தா ரப்போ
சொன்னவகை தனையறிந்து மார்க்கண் டேயன்
சொல்லுவான் குழந்தையவன் கலக லென்ன
அன்னை தனை முகம்பார்த்து மாலை நோக்கி,
'அரிகரி! ஈசர்மொழிக் குரைநீர் சொல்வீர்;
பின்னைவகை யாருரைப்பார் மாயை மூர்த்தி!
பேசாம லிருந்துவிட்டா லொழிவா ரெங்கே?' 4

எங்கென்று மார்க்கண்ட னெடுத்துச் சொல்ல
என்னசொல்வா ரேகவெளிச் சிவனை நோக்கிக்
'கங்கைதனைப் பூண்டோனே! கடவு ளோனே!
காரணமே! பூரணமே! கண்ணே! மின்னே!
சங்கையினி யேதறிவேன் மகுடச் சோதி
சந்திரனைப் பூண்டிருந்து தவம்பெற் ருேனே!
மங்கையிடப் பாகம்வைத்த மகுடத் தோனே!
மாமுனிகள் ரிடிசித்தர் அறிவார் காணே. 5

'அறிவார்கள் ரிடி சித்தர் முனிவோ ரையா!
அரகரா! அதுக்குக்கோ ளாறென் றக்கால்
பொறியாகப் புசுண்டமுனி சொல்வா ரையா!
போயழைக்கக் கோளாறி வசிட்ட ராகும்
நெறியாக இவ்வகைநா னறிவே னையா!
நிலைத்தமொழி புசுண்டரலால் மற்றோர் சொல்லார்;
புரிவாரு மிவ்வளவென் றுரைத்தார் மாயர்
பொருள்ஞானக் கடவுளப்போ மகிழ்ச்சி பூண்டார். 6

மகிழ்ச்சியுடன் மார்க்கண்டா வாராய் கண்ணே!
வரலாறு நீயெவ்வா றறிவாய் சொல்வாய்;
சுகட்சியுடன் கருதிப்பார் யுகங்கள் தோறும்
சூட்சமிந்த மாலோன்றன் வயிற்றிற் சேர்வான்
அகட்சியுடன் ஆலிலைமே லிருப்பா ரையா!
அப்போதே இவரிடத்தி லெல்லா ஞானம்
இகழ்ச்சியுட னிவற்குப்பின் எவரோ காணேன்
இவ்வார்த்தை நானறியே னவரைக் கேளீர். 7

கேளுமென்றான் மார்க்கண்டன் சிவன்தா னப்போ
கிருபையுட னிவ்வளவு மறிவா யோடா?
ஆளுகின்ற ஈசனுநா மறியோ மிந்த
அருமைதனை நீயறிந்தா யருமைப் பிள்ளாய்!
காளகண்டர் மாயோனைச் சொல்வீ ரென்றார்
கருவேது நீயறிந்த வாறு மேது?
பாளுகின்ற முப்பாழுந் தாண்டி நின்ற
பரஞான சின்மயமின் பகர்ந்தி டீரே. 8

பரமான பரமகயி லாச வாசா!
பார்த்திருப்போ மாலிலைமேற் பளளி யாகித்
தரமான புசுண்டமுனி யந்த வேளை
சக்கரத்தைப் புரளவோட்டார் தவத்தி னாலே

துரமாக எவ்வாறு திரும்பப் போவார்
சூட்சமதை நாமறிவோம் பின்னே தோ.தான்
வரயான வரமளித்த சூரன் வாழ்வே
வசிட்டர்போ யழைத்துவரத் தகுமென் றுரே. 9

தகுமென்ற வார்த்தைதனை யறிந்தே யீசர்
தவமான வசிட்டரே புசுண்டர் சாகை
அகமகிழ அங்கேகி அவர்க்கு ரைத்தே
அவரையிங்குச் சபைக்கழைத்து வருவா யென்ன,
செகமான செகமுழுது மாண்ட சோதி
திருவடிக்கே நமக்கரித்துத் திரும்பி னார்பின்
உகமானந் தனையறிந்தும் அரனார் சொன்ன
உளவுகண்டார் புசுண்டரெனுங் காகந் தானே. 10

காகமென்ற வேடமதாய் விருட்ச மீதிற்
காத்திருந்தார் வசிட்டரவர்க் கண்டார் நாதர்
'ஏகமதா யெட்டான வசிட்ட ரே! நீர்
எங்குவந்தீர்? வாரும்,' என்றே இட மு மீயத்
'தாகமுடன் ஈசருமை யழைக்கச் சொன்னார்;
சங்கதியைத் தங்களிடஞ் சாற்ற வந்தேன்;
பாகமுடன் எட்டான விவரந் தன்னைப்
பத்துமெய்ஞ் ஞானபொரு ளருள்பெற் றோரே! 11

'பெற்றோரே யென்றுரைத்தீர் வசிட்ட ரே! நீர்
பிறந்திறந்தே எட்டாங்காற் பிறந்து வந்தீர்;
சத்தான சத்துகளு மடங்குங் காலம்
சக்கரமுந் திரும்பிவிட்டாற் சமயம் வேறும்
சித்தான பஞ்சவர்க ளொடுங்கும் போது
சேரவே ரிடிமுனிவர் சித்த ரோடு
முத்தாகப் பஞ்செழுத்தி லொடுக்க மாவார்
முத்துமணிக் கொடியீன்றுள் முனைத்திட் டீரே. 12

'முளைத்திட்டீ ரித்தோடெட் டுவிசை வந்தீர்;
முறையிட்டீ ரிவ்வண்ணம் பெருமை பெற்றீர்;
களைத்திட்டுப் போகாதீர் சொல்லக் கேளும்:
கண்டமதில் விடம்பூண்டார்க் கலுவ லென்ன?
கிளைத்திட்டுப் போனக்கால் மறந்து போவார்
கிளர்நான்கு யுகந்தோறு மிந்தச் செய்கை
பிழைத்திட்டுப் போவமென்று லங்கே போவோம்
பேய்பிடித்தோர் வார்த்தைசொல்ல நீர்வந் தீரே. 13

வந்திரே வசிட்ட ரே! இன்னங் கேளும்:
வளமைநான் சொல்லிவந்தேன் வேடம் நீங்கி
இந்தமா மரக்கொம்பி லிருந்தே னிப்போ
திதுவேளை யெவ்வளவோ சனமோ காணும்
அந்தமோ ஆதியோ இரண்டுங் காணார்
அவர்களெல்லாம் ரிடியோகி சித்த ரானார்;
சந்தேக முமக்குரைக்கப் போகா தையா!
சாமிக்கே சொல்லுவமையா இதோவந் தேனே.' 14

வந்தேனே யென்றுரைத்த வாறு கொண்டு
வசிட்டருமே வாயுலர்ந்து காலும் பின்னி,
' இந்தேனே முனிநாதா! சரணங் காப்பீர்,'
என்றுசிவன் சபைநாடி முனிவர் வந்தார்;
மைந்தனையே யீன்றருளுங் கடவுள் நாதா!
மாமுனிவன் வாயெடுக்கப் புசுண்டர் சொல்வார்:
' சிந்தனைசெய் ஈச்சுரனே வந்தே னையா!
சிவசிவா இன்னதென்று செப்பி டீரே.' 15

செப்புமென்ற புசுண்டமுனி முகத்தை நோக்கிச்
சிவன்மகிழ்ந்தே ஏதுமொழி செப்பு வார்கேள்:
' கொப்புமென்ற யுகமாறிப் பிறழுங் காலம்
குருநமசி வாயமெங்கே பரந்தா னெங்கே?

அப்புமெந்தப் பஞ்சகணத் தேவ ரெங்கே?
அயன்மாலும் சிவன்மூவ ரடக்க மெங்கே?
ஒப்புமிந்த யுகம்மாறிப் பிறந்த தெங்கே?
ஓகோகோ முனிநாதா வுரைசெய் வீரே!' 16

'உரையென்றீ ருந்தமக்குப் புத்தி போச்சு;
உம்மோடே சேர்ந்தவர்க்கும் மதிகள் போச்சு;
பரையென்றால் பரைநாடி நிலைக்க மாட்டீர்;
பரமசிவன் தானமென்னும் பேரும் பெற்றீர்;
இரையென்றால் வாய்திறந்த பட்சி போலே
எல்லோரு மப்படியே இறந்திட் டார்கள்;
நிறையென்ற வார்த்தைகளைச் சொன்னே னானால்
நிசங்கொள்ளா தந்தரங்கம் நிசங்கொள் ளாதே.' 17

'கொள்ளாமற் போவதுண்டோ மவுன யோகி;
கோடியிலே உனைப்போலே ரிடியோ காணேன்;
உள்ளாக ரிடியொருவ ரில்லா விட்டால்
யுகவார்த்தை யாருரைப்பார் யானுங் காணேன்;
விள்ளாமற் றீராது முனிவ னே! கேள்:
மெய்ஞ்ஞான பரம்புகுந்த அருள்மெய்ஞ் ஞானி
தள்ளாமற் சபையிலுள்ளோ ரெல்லோர் கேட்கச்
சாற்றிடாய் முனிநாதா! சாற்றி டாயே.' 18

'சாற்றுகிறே னுள்ளபடி யுகங்கள் தோறும்
தமக்குவந்து சொல்லுவதே தவமாய்ப் போச்சு;
மாற்றுகிறேன் கணத்தின்முன் னுரைத்துப் போனேன்;
வாதாட்ட மெனதாச்சே இனியென் சொல்வேன்?
சேற்றிலே நாட்டியதோர் கம்பம் போலத்
திரும்பின்து போலாச்சு யுகங்கள் தோறும்;
ஆற்றுகிரு னந்தமது ஆகும் போது
அரகரா அந்நேரம் நடக்கை கேளே.' 19

கேளப்பா நடந்தகதை சிவமே யுண்மை
கெடியாகச் சக்கரங்கள் திரும்பும் போது
பாளப்பா தசநாதம் மவுனம் பாயும்;
பரமான மவுனமது பரத்திற் சாடும்;
ஏளப்பா அடுக்குகளும் இடிந்து வீழும்;
இருந்தசதா சிவமோடி மணியில் மீளும்;
கோளப்பா இதுகேளா யெவருஞ் சொல்வார்
கோகோகோ அண்டமெல்லாங் கவிழ்ந்துபோமே. 20

கவிழ்ந்துபோ மப்போது அடியே னங்கே
கருத்துவைத்துத் தியானமொரு தியான மூண்டு
தவழ்ந்துபோங் காலமப்போ நிறுத்து வேன்யான்
சமையமதி லக்கினிபோல் தம்பங் காணுஞ்
சிவந்தவண்ணம் நீலவுருச் சுடர்விட் டேகும்;
சிவசிவா அக்கினிபோற் கொழுந்து வீசும்;
நவந்துஅத னருகேநான் சென்று நிற்பேன்;
நகாரமுத லஞ்செழுத்தும் வரக்காண் பேனே. 21

காண்பேனே நகாரமது மகாரம் புக்கும்
கருத்தான மகாரமது சிகாரம் புக்கும்
தேண்பேனே சிகாரமது வகாரம் புக்கும்
சிவசிவா வகாரமது யகாரம் புக்கும்
கோண்பேனே வகாரமது சுடரிற் புக்குங்
குருவான சுடரோடி மணியிற் புக்கும்
நாண்பான மணியோடிப் பரத்திற் புக்கும்
நற்பரந்தான் சிவம்புக்குஞ் சிவத்தைக் கேளே. 22

கேளப்பா சிவமோடி அண்டம் பாயும்
கிருபையா யண்டமது திரும்பிப் பாயும்
கோளப்பா அண்டமது கம்பத் தூண்தான்
குருவான தசதீட்சை யொன்று மாச்சு

மீளப்பா தம்பமது விளங்குஞ் செய்கை
மேலுமில்லை கீழுமில்லை யாதுங் காணேன்;
ஆளப்பா நரைத்தமா டேறு வோனே!
அன்றளவோ வின்றளவோ அறிந்தி லேனே.' 23

'அறிந்திலே னென்றுரைத்த புசுண்ட மூர்த்தி!
அரகரா உன்போலே முனியார் காணேன்;
தெரிந்திலே னென்றுரைத்தால் மனங்கே ளாது
சிவனயந்து கேட்கவும்நீ யொளிக்க வேண்டா;
பொருந்திலேன் பூருவத்தில் நடந்த செய்கை
பூரணத்தா லுள்ளபடி புகழ்ந்து சொல்லும்
பரிந்திலேன் மிகப்பரிந்து கெட்டே னையா!
பழமுனியே கிழமுனியே பயன்செய் வாயே.' 24

'பழமுனிவ னென்றுரைத்தீர் கடவு ளாரே!
பருந்தீப தம்பத்தைப் பலுக்கக் கேளும்:
குழுவுடனே தம்பமதில் யானும் போவேன்
கோகோகோ சக்கரமும் புரண்டு போகும்;
தழும்பணியச் சாகரங்க ளெங்குந் தானுய்ச்
சத்தசா கரம்புரண்டே யெங்கும் பாழாய்
அழகுடைய மாதொருத்தி தம்பத் துள்ளாய்
அரகரா கண்ணாடி லீலை தானே. 25

'லீலைபோற் காணுமுகம் போலே காணும்
நிலைபார்த்தால் புருடரைப்போற் றிருப்பிக் காணும்;
ஆலைபோற் சுழன்றுடுங் கம்பத் துள்ளே
அரகரா சக்கரங்க ளாறுங் காணும்
வாலைபோற் காணுமையா பின்னே பார்த்தால்
மகத்தான அண்டமது கோவை காணுஞ்
சோலையா யண்டமதிற் சிவந்தான் வீசும்
சிவத்திலே அரகரா பரமுங் காணே. 26

'பரத்திலே மணிபிறக்கும் மணியி னுள்ளே
பரம்நிற்குஞ் சுடர்வீசும் இப்பாற் கேளும்:
நிரத்திலே சடமதனில் யகாரங் காணும்
நிச்சயமாம் யகாரமதில் வகாரங் காணும்
வரத்திலே வகாரமதிற் சிகாரங் காணும்
வரும்போலே சிகாரத்தில் மகாரங் காணும்
நரத்திலே மகாரத்தில் நகாரங் காணும்
நன்ருமப் பூமியப்போ பிறந்த தன்றே. 27

'பிறந்ததையா இவ்வளவு மெங்கே யென்ருல்
பெண்ணொருத்தி தூணதிலே நின்ற கோலம்
சுறந்ததையா யிவ்வளவும் அந்த மாது
சூட்சமதே அல்லாது வேருென் றில்லை;
கறந்ததையா உலகமெல்லாங் காமப் பாலைக்
காலடியிற் காக்கவைத்துச் சகல செந்தும்
இருந்ததையா இவ்வளவுஞ் செய்த மாது
எங்கென்று னுன்னிடத்தி லிருந்தாள் கன்னி. 28

'இடப்பாக மிருந்தவளு மிவளே மூலம்
இருவருக்கும் நடுவான திவளே மூலம்
தொடக்காக நின்றவளு மிவளே மூலம்
சூட்சமெல்லாங் கற்றுணர்ந்த திவளே மூலம்
அடக்காக அடக்கத்துக் கிவளே மூலம்
ஐவருக்குங் குருமூல மாதி மூலம்
கடக்கோடி கற்பமதில் நின்ற மூலம்
கன்னியிவள் சிறுவாலை கன்னி தானே.' 29

கன்னியிவ ளென்றுரைத்தார் புசுண்ட மூர்த்தி
கர்த்தரப்போ மனஞ்சற்றே கசங்கி னூர்பின்
மண்ணுள்ள தேவர்களும் பிறப்பித் திந்த
மார்க்கத்தி லிருப்பதுவோ மவுனப் பெண்ணே!

உன்னிதமா யுன்கருணை யெங்கே காண்போம்
ஓகோகோ ஐவருந்தான் வணங்கி னார்கள்
கொன்னியவள் வாக்குரையாள் சிவமே கன்னி
கொலுமுகத்தில் நால்வரும்போய் வணங்கி னாரே. 30

வணங்கியவர் வாய்புதைத்து நின்றார் பின்னே
மாதுகலி யாணியென வசனித் தார்கள்
வணங்கினார் தேவரொடு முனிவர் தாமும்
மற்றுமுள்ள தேவர்களும் நவபா டாளும்
வணங்கின ரட்டகசந் திகிரி யெட்டும்
வாரிதியுஞ் சேடனுபா லயனு மூவர்
வணங்கினார் மிகவணங்கித் தொழுதா ரப்போ
வாலையவள் மெய்ஞ்ஞானம் அருளீ வாளே. 31

அருளீவாள் திருமணியை மாலை பூண்டாள்
அரகரா சின்மயத்தி னீறு பூசிப்
பொருளீவா ளவரவர்க்கும் ஏவல் சொல்லிப்
பொன்றாத பல்லுயிர்க்கைக் கிடங்கள் வேறாய்த்
தெருளீவாள் சிவயோகந் தெளிவ தற்குச்
செயலுறுதி யாகவல்லோ தெரிய வேண்டித்
திருளீவாள் தாயான சிறிய வாலை
சிவசிவா சூட்சம்பூ ரணமு முற்றே. 32

பூருவத்தில் நடந்தகதை இதுதா னென்று
புகன்றுவிட்டுப் புசுண்டருந்தம் பதிக்குச் சென்றார்;
காரணத்தி லேவகுத்தே விந்த ஞானங்
கம்பமணி வாலைகொலுக் கூட்ட மப்பா
நாரணத்தில் நின்றிலங்கும் மவுன வாலை
நாட்டினாள் சிவராச யோகங் கேளு
ஆரணத்தி பூரணத்தி யருள்மெய்ஞ் ஞானி
ஆதிசத்தி வேதமுத்தி யருள்செய் வாளே. 33

# காகபுசுண்டர் குறள்

குறள் வெண்பா

சின்மயத்தைப் போற்றிச் சிவராச யோகத்தில்
நன்மை பராபரத்தை நாடு. 1

அண்ட முடிமீதி லங்கி ரவிமதியைக்
கண்டுதரி சித்தல் கதி. 2

வலமிடமாய் நின்ற மதிரவியை மாறி
விலகா தடியினிற்பின் வீடு. 3

அறுபத்து நால்யோக மவ்வளவுந் தள்ளி
ஒருபொழுது முண்டுநிலை யோர். 4

உலகமே மாயமென வுன்மனத்திற் கண்டு
நலமாக நாதனடி நம்பு. 5

சித்தர் பதினெண்மர் செய்கையிற் றோன்றுத
அத்தனரு ளும்புசுண்டன் யான். 6

சொன்னே னறிந்து சுகமா யுலகோருக்
கெந்நாளும் வாழ்கவென் றே யான். 7

கண்ணுள் மணியாகிக் காரண மாய்நின்றான்
மண்ணு முயிர்பதியு மாறு 8

விண்டேனே ஞானம் வெளியாக முட்பத்தி
ரண்டி லறிவீர் நலம். 9

நேத்திரத்தைக் காகம்போல் நிச்சய மாய்நிற்க
ஆத்துமத்தி லானந்த மாம். 10

உலகி லறிந்தோ ரொருநாளும் மாளார்
பலநினைவை விட்டுநீ பார். 11

கண்டோருஞ் சொல்லார் கருத்தாற் பெரியோரைத்
தொண்டுசெய்து பெற்ற சுகம். 12

ஆதியிற் சொன்னவிய ரண்ட மதையெடுத்து
மாதுசிவன் பூசைசெய்து வை. 13

முப்பொருளைச் சுட்டு முழுதழுது நீருக்கித்
தப்பாம லுண்டுநிலை சார். 14

யோகமுடன் கற்ப முரைத்தேனீ ரெட்டினில்
வேகமுடன் கண்டுணரு வீர். 15

வாசிமுனி மைந்தா மருவு பிரமத்தில்
மோசம்வா ராகுறள்முற் றும். 16

சூரியானந்தர் அருளிச்செய்த

# சூரியானந்தர் சூத்திரம்

எண்சீர் விருத்தம்

சீர்கொண்ட அருமறையின் பொருளாய் நின்ற
தெட்சிணு மூர்த்தியுடைப் பாதங் காப்பு;
பேர்கொண்ட சூத்திரமே பதின்மூன் றுக்குள்
பிரித்துவைப்பேன் பூவழலை பெருமை யெல்லாம்
நீர்கொண்ட வூசரத்தின் மகிமை தன்னை
நிசமாகச் சொல்லாமல் மறந்து விட்டார்
ஆர்கொண்ட வேணியனு ருமக்குச் சொன்னுர்
ஆத்தாளு மடியேனுக் கறைந்திட் டாளே. 1

அறைந்திட்ட வகையேது வுப்பே ஆதி
ஆகாச விந்துவிஞல் செனித்த பிண்டம்
மறைந்திட்ட வுப்பதுவே காரங் காரம்
மண்ணுன வுப்பதுவே சாரஞ் சாரம்
கறைந்திட்ட வூசருத்துக் கேற்ற வுப்பைக்
காணுமற் போனதிஞற் கலக்க மாச்சு
இறைந்திட்ட மலசலமாய்க் காண லாகும்
இந்தவிரண் டோரிடத்தி லிருக்கும் பாரே. 2

இருக்கின்ற வுப்பினுக்கு மூலா தாரம்
இந்துவொன் றிரவியொன்று வன்னி யொன்று
பெருக்கின்ற வீசனுக்குச் சூட்ச முந்தான்
பிருதிவியே தூலமெனப் பேச லாகும்
கருக்கொண்ட யோனியிலே நாலு பேதம்
கருதையிலே யெழுதோற்றங் காண லாகும்
உருக்கொண்ட சிவசெந்தும் அனேக முண்டாம்
உற்றுப்பா ரண்டபிண்ட முண்மை தானே. 3

தானாக நின்றதுவே பாரு மாச்சு
சகலசித்துப் பிரகிருதி யுயிரு மாச்சு
வானாகி நின்றதுவே சாட்சி யாகும்
மன்னுயிரெல் லாஞ்சோதி மயமு மாச்சு
ஊனாகப் பிறந்தசடம் பிறவா முத்திக்
குதவியல்லோ பிரகிருதி யோனி யோனி
கோனாக நின்றகுரு வுபதே சத்தாற்
குழிபுகுந்தே யுப்பெடுத்துக் கொள்ளு வாயே. 4

கொள்ளுவார் முப்பூவின் முதலா மங்கம்
கூர்ந்துபா ருசரத்தைக் கொள்கிக் கொண்டு
விள்ளுவார் யோனியின் படிவி டாமல்
மேலேற்ற மேலுதவி மேவிற் றானல்
துள்ளுவா ரிந்துப்புச் சிவமு மாச்சு
துருசுப்புப் பணவிடையாற் றெருந்த மேற்றித்
தள்ளுவார் பிரளயமோர் கோடி காலம்
சகலசித்தும் மூலவுப்புத் தன்னி லாச்சே. 5

ஆச்சப்பா மூலவுப்புக் கஞ்சு தீட்சை
ஆதியுப்புக் கப்படியே தீட்சை யாகும்
மூச்சப்பா தசதீட்சை யார்தான் செய்வார் ?
மூலகுரு செய்வார்பின் னோர்தான் செய்தார்!
ஏச்சப்பா கொங்கணவர் தீட்சை மார்க்கம்
ஏற்றிவிட்டார் முப்பத்தி ரண்டா மென்று
பேச்சப்பா பேசினதி லாவ துண்டோ
பிண்டவுப்புக் கேழுவிதம் பேச லாமே. 6

பேசுகின்ற வுப்பினுக்கு மேலே அங்கம்
பெருமையுள்ள சித்தர்கள்தாம் செய்யும் மார்க்கம்
வீசுகின்ற சூதத்தின் துறைக ளெல்லாம்
மிஞ்சவில்லை மூன்றுநா லஞ்சா னாலும்

பாசையினாற் சொன்னார்கள் வெளிதோன் றாது
  பாலனுக்குந் தோன்றுமிந்த நூலைப் பார்த்தால்
கூசல்மிஞ்சிப் போடுதென்று என்றன் நூலைக்
  குகைக்குள்மறைத் திட்டதனாற் கூறொண் ணாதே. 7

ஒண்ணான நூலாகு மிருநூற் றைந்தில்
  ஓதிவைத்த கருத்தெரியு மிருபத் தைந்திற்
கண்ணாகு மிந்தநூல் பதின்மூன் றுக்குள்
  கருவையொரு கற்பமுறை காட்டி வைத்தேன்
வண்ணானை யறியாத பேருக் கெல்லாம்
  வாதியென்ற பேரேது வாத மேது?
பெண்ணாணின் சுரோணிதமும் விந்துங் கண்டால் 8
  பேரான பூரணத்தின் பெருமை தானே.[1]

பெருமையென்ற காயசித்தி பண்ணி விட்டாற்
  பேரான அடியோடு முடியும் போச்சு
அருமையென்ற குண்டலிக்குள் வராகி பூசை
  அப்பனே கண்டமதி லங்கென் றாணு
புருவமையத் துள்ளேவும் மென்று கும்பி
  போதமென்ற மவுனவித்தை கைக்குள் ளாச்சு
தருமவித்தை பிரகிருதி மூச்சா டாது
  சகத்திரத்தெண் மலர்ப்பதத்திற் சார்ந்து நில்லே. 9

நில்லாத மூலிகையாற் காய சித்தி
  நிட்டைமவு னத்தாலே யோக சித்தி
கொல்லாத மூலமதில் அபான சுத்தி
  கூடாம லிருந்துவிட்டா லேது முத்தி?

---

1. "எண்ணு யிரத்தி லிருநூறு மந்திரம்
  அண்ணார் சொன்னு ரடியே னறிந்தேன்
  சொன்னார் சிவப்புச் சோர்பச்சை ரூபம்
  வண்ணா னறிவான் வகாரத் திரையமே."
என்று திருமூலர் திருமந்திரத்திற் சொல்லப்பட்டிருக்கிறது.
அதைப் பார்த்துத் தெரிந்துகொள்க.

சொல்லாத வீசனுப்பு மதிகூ தத்திற்
சூட்டினேன் வெள்ளையென்ற கூடன் வித்தை
எல்லாரு மிந்தவிதம் பாட மாட்டார்
இதமான சூதகத்தின் வெடியுப் பாச்சே. 10

உப்பான வெடியுப்புச் செயநீ ராலே
ஒருகோடி வித்தையெல்லா மாட லாகும்
அப்பான கல்லுப்பு நீரி னாலே
ஆடலாந் துருசினுடை அங்க மெல்லாம்
செப்பாத யோனிருது செந்நீர் மட்ட ாற்
சிவன்வேறு தானுண்டே யிவனல் லாமல்
தப்பாமற் செய்தென்ன சவுக்கா ரந்தான்
சட்டிமுதற் பவுரணையுந் தாக்கிப் பாரே. 11

தாக்கிப்பா ராகாசஞ் சருவ சாட்சி
சதாசித்தம் அந்தரமே சாடி நின்றால்
நோக்கிப்பார் வாயுலயப் படுவ தற்கு
நூதனமாய் வன்னியதிற் கூட வேணும்
மூக்கிற்று ணேடுவது பிராண வாயு
மூலமெனும் வளையமது நகாரந் தன்னைத்
தூக்கித்தான் விட்டவர்க்கு யோக மெய்தும்
சூரியா னந்தனிவை சொல்லும் நூலே. 12

சொல்வதென்ன ரேசகத்தை வெளிவி டாதே
துடியான பூரகத்தைப் பின்னி டாதே
வெல்வதென்ன கும்பகத்தை யடிவி டாதே
மேலேற்று மாத்திரையை மறந்தி டாதே
செல்வதென்ன கற்பத்தை மறந்தி டாதே
செந்தூரஞ் சேர்க்கையிலே சிதறி டாதே
கொல்வதென்ன அமுதயலே பிறக்கு மிந்தக்
குளிகைக்குச் சாரணைசெய் குணமு முற்றே. 13

# அருஞ்சொற்பொருள் அகராதி

அக்கமணி-உருத்திராட்சம்
அக்கு-எலும்பு
அகக்கரணம்-மனம்
அகிதம்-தீமை
அகிர்த்தியம்-தகாத செயல்
அகிலம்-உலகம்
அங்கனி-அழகிய கொவ்வைப் பழம்
அங்காடி-கடைத்தெரு
அங்கி-தீ
அங்கிசம்-அமிசம்
அங்குரித்து-தோன்றி
அங்கை-உள்ளங்கை
அசடர்-மூடர்
அசரம்-தாவரம்
அசுகம்-சுகமின்மை
அசும்பு-கசிவு
அஞ்சக்கரம்-பஞ்சாட்சரம்
அஞ்சுகரத்தானை-வினாயகக் கடவுள்
அட்டசித்தி-அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்னும் எட்டு யோக சித்திகள்
அடலை-சாம்பல்
அடிகள்-குரு
அடியிற்பொடி-பாததூளி
அடுக்கழிய-கலைய
அண்டம்-உலகம்
அண்டர்கோன்-கடவுள்
அண்டரண்டம்-தேவருலகம்
அண்ணல்-பெருமான்
அத்தம்-பொருள்
அத்தன்-தந்தை
அத்தி-யானை, நாடிகளுள் ஒன்று
அத்திமுகன்-யானைமுகன் (வினாயகக்கடவுள்)
அத்துவிதம்-இரண்டாகப் பிரிக்கக் கூடாதது
அதர்-தலைப்பொடுகு
அதரம்-உதடு
அதள்-தோல்
அதிட்டானம்-நிலைக்களம்
அந்தகன்-குருடன்
அந்தரம்-ஆகாயம்
அந்தி-மாலை நேரம்
அப்பிட்ட வேணி-கங்கை தங்கிய சடை
அப்பிட்ட வேணியன்-சிவன்
அப்பு-நீர்
அப்புப்பிறை-மணிபூரகம்
அப்பைக் கக்கி-கபநீரைக் கக்கி
அம்பரம்-ஆகாயம்
அம்பு-நீர்
அம்புலி-சந்திரன்
அம்புவி-அழகிய பூமி
அம்போருகம்-தாமரை மலர்
அமலன்-கடவுள்
அமுரி-சிறுநீர் உப்பு
அமையும்-போதும்
அயன்-பிரமன்
அரணங்கள்-கோட்டைகள்
அரன்-சிவன்
அரி-திருமால், சிங்கம், தவளை
அருக்கன்-சூரியன்
அருணன்-சூரியன்
அருந்தாமுலை-உண்ணாமுலை (பார்வதி)
அருந்தின-உட்கொண்ட உணவுகள்
அருந்தினை-அனுபவித்தாய்

அருளைவிழுங்கும் இருள்-ஆணவ மலம்
அரைஞாண்-இடுப்புக் கயிறு
அல்-கருமை, இரவு
அல்குல்-பெண் குறி, பிட்டம்
அல்குற்பை-கருப்பை
அலங்டும்-பெருக்குங்கள்
அலகு-அளவு
அலகைத்தேர்-பேய்த்தேர் (கானல் நீர்)
அலமரும்-சுழலும்
அவ்வெழுத்து-ஆன்ம எழுத்து
அவம்-வீண்
அவல்-பள்ளம்
அவுடதம்-மருந்து
அழற்சி-எரிவு
அழுக்காறு-பொறாமை
அழுங்கி-வருந்தி
அழுங்கினை-வருந்தினாய்
அளிப்பு-இரட்சிப்பு
அளுக்கி-குலைந்து, நடுங்கி
அளைந்து-கலந்து
அறம்-தருமம்
அறுகு-அறுகம்புல்
அறுபதுபேர்-60 தத்துவங்கள்
அன்றில்-ஒரு பறவை
அனந்தன் - அஷ்டமகா நாகங்களுள் ஒன்று
அனன்னியம்-வேறு அல்லாமை
அனுகதம் - மணிபூரகத்திற்கு மேல் இருதய வெளியில் பன்னிரண்டிதழ்த் தாமரைபோல அமைந்துள்ள சக்கரம்
ஆ-பசு
ஆக்கை-உடல்
ஆகிகம்-உடல்
ஆகாமியம்-இப்பிறப்பிற் செய்யும் புண்ணிய பாவங்கள்
ஆங்காரம்-செருக்கு
ஆசம்-சிரிப்பு
ஆசயம்-உடலின் உட்பை
ஆசு-குற்றம்
ஆகுசழ்-அருயை

ஆஞ்ஞை-இருபுருவ மத்தியில் ஈரிதழ்த் தாமரையைப்போல அமைந்துள்ள சக்கரம்
ஆட்டுக்கால்-நடிக்கும் பாதம்
ஆண்டார்-தலைவர்
ஆணி-ஆதாரம், முதன்மை
ஆத்தும தத்துவங்கள்-ஞானேந்திரியம், கன்மேந்திரியம், அந்தக்கரணம், தன்மாத்திரை, பூதம் என்பவை
ஆதாயம்-இலாபம்
ஆதார மூலம்-மூலாதாரம் (ஆறு தாரங்களுள்குய்யத்துக்கும் குதத்துக்கும் மத்தியில் நாலிதழ்த் தாமரை போல உள்ள சக்கரம்)
ஆதிசேடன் - ஆயிரந்தலையுடைய தெய்வப் பாம்பு
ஆதித்தன்-சூரியன்
ஆப்பு-முளை
ஆபாதன்-நழுவுகின்றவன்
ஆயன்-இடையன்
ஆயிரக்கால் மண்டபம் - சந்திர மண்டிலத்திலுள்ள பிரமரந்திர மண்டபம்
ஆர்ந்த-போன்ற
ஆரியன்-குரு
ஆலம்-விஷம்
ஆலவட்டம்-விசிறி
ஆலவாய்-மதுரை நகரம்
ஆவுகின்ற-விரும்புகின்ற
ஆழியோன்-திருமால்
ஆருத நாடு-அழிவற்ற பூமி
ஆறுதாரம் - மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்னும் ஆறு சக்கரங்கள்
ஆறு-வழி
ஆனனம்-முகம்
இகல்-பகை
இச்சிப்பு-விருப்பம்
இட்டசனம்-சுற்றத்தார்
இடும்பர்-கர்விகள்

இடும்பை-துன்பம்
இடைகலை-சந்திரகலை
இடைபிங்கலை - சந்திர சூரிய கலைகள்
இதம்-நன்மை
இதரம்-வேறு
இதழ்-உதடு
இந்தனம்-விறகு
இந்தியம்-இந்திரியம்
இந்திரசாபம்-வானவில்
இந்து-சந்திரன்
இம்மென்று-விரைவாக
இமவான்-மலையரசன்
இமிர்தல்-ஒலித்தல்
இமையவல்லி-பார்வதி
இயல்-தன்மை
இரதம்-சுவை
இரவி-சூரியன்
இருத்தும்-இருக்கச் செய்யும்
இருப்பையூர்-ஒரு சிவ ஸ்தலம்
இருவினை-நல்வினை தீவினைகள்
இருவினைக்கீடாயெடுத்த பொம்மை-உடல்
இருவினைக்கூடு-உடல்
இரேசகம் - உள்ளித்பூத வாயுவை வெளியே விடுதல்
இவறு-உலோப குணம்
இறை-கடவுள்
இன்பு-விருப்பம்
இலக்கரணம் - அகக்கரணங்களுக்கு இனமான புறக்கரணங்கள் (கை,கால் முதலிய உறுப்புகள்)
இனை-இத்தனை
ஈம்-நிட்டையிலுண்டாகும் ஒலி
ஈமக்கனல்-பிணஞ்சுடு தீ
ஈரொளி-குளிர்ச்சியான பிரகாசம்
உக்கு-மெலிவு
உகிர்-நகம்
உச்சி வெளி-சிதாகாசம்
உசும்புதல்-அசைதல்
உஞற்றுதல்-செய்தல்

உட்சமயம்-அகச்சமயம் (பாஷாண வாதம், பேத வாதம், சிவசம வாதம், சிவ சங்கிராந்த வாதம், ஈசுவர அவிகார வாதம், சிவாத்துவிதம் என்னும் சைவத்தின் உட்பிரிவுகள்)
உடக்கு-உடல், திருகாணி மரையின் உட்சுற்று
உடுபதி-சந்திரன்
உண்ணாமுலை-பார்வதி
உத்தியம்-யாக வகை
உதகம்-நீர்
உதயச்சுடர் மூன்று - ஆவகனீயம், காருகபத்தியம், தட்சிணாக்கினியம், என்னும் முத்தீ
உதரம்-வயிறு
உந்தி-கொப்பூழ் (தொப்புள்)
உப்பிட்ட பாண்டம்-உடல்
உப்புக் குடுக்கை-உடல்
உய்-பிழை
உய்த்தறி-ஆராய்ந்து அறி
உயிர்ப்பு-மூச்சு, பிராணன்
உரகம்-பாம்பு
உலுத்தன்-உலோபி
உலைந்து-அழிந்து
உவமை-ஒப்பு
உழுவை-புலி
உளியிட்ட கல்-உளியாற் செதுக்கப்பட்ட கற்சிலை (விக்கிரகம்)
உளைந்திடும்-வருந்தும்
உறக்கு-தூக்கம்
ஊன்-உடல்
எட்டாப் பழம்பதி-சிவபதம்
எட்டு நாகம்-வாசுகி, அனந்தன், தக்கன், சங்கபாலன் குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன் என்னும் அஷ்டமா நாகங்கள்
எந்தை-என் தந்தை
எய்க்காமல்-இளையாமல்
எரி-நெருப்பு
எருவாய்-மலத்துவாரம்

எழுவகைத் தோற்றம்-(தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன நீரில்வாழ்வன தாவரம் என்னும்) எழுவகைப் பிறவிகள்
என்பு-எலும்பு
என்போலிகள் - என்னைப்போன்றவர்கள்
ஏகாந்தம்-தனிமை
ஏச்சு-பழிப்பு
ஏடணை-(ஏஷணை) விருப்பம்
ஏடணை மூன்று - (மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என்னும்) மூவாசைகள்
ஏடு- இதழ்
ஏய்ந்த-பொருந்திய
ஏரொளி-அழகிய பிரகாசம்
ஐ-கோழை
ஐங்கரன் - விநாயகன்
ஐம்புலன் - சுவை, ஒளி, ஊறு ஓசை, நாற்றம்
ஐம்பூதம் நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம்
ஐம்பொறி- மெய், வாய், கண், மூக்கு, செவி
ஐம்மலம் - ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதானம் என்ற ஐவகை மலங்கள்
ஐயகோ-ஐயோ
ஐயன்-கடவுள்
ஐவர்-பஞ்சேந்திரியங்கள்
ஒக்க-ஒன்றாக
ஒடு- பழம்புண்
ஒடுக்கம் இறப்பு
ஒப்பனை-அலங்காரம்
ஒப்பாரி-ஒப்புச்சொல்லிப் புலம்புதல்
ஒப்பு-சமத்துவம்
ஒயில்-ஒய்யாரம்
ஒருக்கி-நீக்கி, மூறுக்கி
ஒருப்படுவது - சம்மதிப்பது, இயைவது
ஒளிரும்-பிரகாசிக்கும்
ஒறுத்தோம்- தண்டித்தோம்
ஓக்கம்-உயர்வு
ஓகை-மகிழ்ச்சி
ஓங்காரம்-பிரணவத்திற்குக் காரணமான நாதம்
ஓம்பற்க-பாதுகாவாமல் ஒழிக
ஓம்பினை -பாதுகாத்தாய்
ஓரம்-பக்ஷபாதம்
ஓராமல்-ஆராயாமல்
ஓருமதோ- ஆராயத்தகுந்ததோ
ஓவியம்-சித்திரம்
கங்குல்-இரவு
கங்குல் பகலற்ற இடம் - சிதாகாசம்
கச்சு-இரவிக்கை
கட்செவி-பாம்பு
கட்டழல் - (கண் + தழல்) கண்ணிலுண்டான தீ
கட்டளை -நிறைக் கருவி
கடி -வாசனை
கடி தடம்-பெண் குறி
கடு-விஷம்
கடும்பு- சுற்றம்
கண்ட-உண்டாக்கிய
கண்ணார-பிரத்தியக்ஷமாக
கண்ணில் காதிறல்
கண்ணுதலோன்-சிவன்
கண்ணேறு- திருஷ்டி தோஷம்
கணக்கு- நியாயம்
கத்தபம்-கழுதை
கத்தன் கர்த்தன்
கத்தா-(கர்த்தா) செய்பவன்
கதலி- வாழை
கந்தம்-வாசனை
கந்தமூலங்கள் -கிழங்குகள்
கம்பம்- நடுக்கம்
கமடம்-ஆமை
கமண்டல வீணன்-பிரமன்
கமலை- திருவாரூர்
கமுகு-பாக்கு மரம்
கயவர்-கீழ்மக்கள்

கரவாமல்-ஒளியாமல்
கரி-யானை
கருக்கொள்ளல் - பிறவியெடுத்தல்
கருணும்பகம்-கருணை நிரம்பிய கண்
கருதார்-பகைவர்
கருப்பாசயம்-கருப்பை
கருப்பு-கரும்பு
கரும்பின் தெளிவு-கருப்பஞ்சாறு
கரும்பொருள்-பெரும்பொருள்
கருவாய் பெண் குறி
கருவி- தத்துவம்
கல்லாவின் பால்-ஆன்மப் பசுவின் ஞானப்பால்
கல்லை-தையல் இலைக்கலம்
கவனி-கந்தக பாஷாணம்
கவிகை-குடை
கவித்தல்-மூடிவித்தல்
கழு-கமுகு கமுகு மரம்
கழுநீர்-குவளை மலர்
கழுநீலம்-நீலோற்பல மலர்
கள்ளல்-மறைதல்
களபம்-சந்தனம்
களம்-கருமை. இடம்
கற்பங்கள்-ஆயுளை நீடிக்கச்செய்யும் மருந்துகள்
கற்பூ-கல்லாற்செய்த மலர்
கறந்திடம்-பலைக் கறந்த இடமாகிய ஸ்தனம்
கன்னல்-கரும்பு
கன்னற்கட்டி-கருப்பங்கட்டி
கன்னிவனநாதன் - மதுரையிலுள்ள சிவபெருமான்
கன்னிவனம்-மீனாட்சியம்மை அரசு புரிந்த மதுரைமாநகரம்
கனம்-கௌரவம்
கா-சோலை
காசினி-பூமி
காசை-நாணற்புல்
காஞ்சிரங்காய்-எட்டிக்காய்
காட்டம்-விறகு
காண்டம்-உப்பு நீர்
காணி-உரிமை. $\frac{1}{80}$ பங்கு
காந்தள்-செங்காந்தள் மலர்
காம்பு-மூங்கில்
காமியம்-விருப்பம்
காயகம்-சங்கீதம்
காயம்-உடல்
கார்-கருமை
கார்க்கோடகன்-அஷ்டமாநாகங்களுள் ஒன்று
காரோணம் - காஞ்சீபுரத்திலுள்ள ஒரு சிவஸ்தலம்
கால்-காற்று
கால காலன்-சிவபிரான்
காலன்-யமன்
காலி-பசு
காலைக்கதிர்-இளஞ்சூரியன்
காவணம்-சோலை
காற்பசு-வாயு
காற்றாதும் துருத்தி-உடல்
கான்-வாசனை
கான்று-கரிந்து
கானல்-பேய்த்தேர்
கிடத்தும்-படுக்கச் செய்யும்
கிரியை-கடவுளை ஆகம விதிப்படி வழிபடல்
கிருமி-புழு
கிழங்கஞ்சருமி - தோலுடன் கூடிய கிழங்கு
கிள்ளை-கிளி
கின்னரம்-இசை பாடும் பறவை
கீடம்-புழு
குக்குடம்-கோழி
குசுகுசுப்பு-காதுக்குள் ஓதுதல்
குஞ்சி-குடுமி
குஞ்சிதபாதம்-நடனத்தில் வளையத் தூக்கிய பாதம்
குடில்-குடிசை
குடிலை-சுத்த மாயை
குதோரி-வெள்ளைப் பாஷாணம்
குண்டர்-சோர புத்திரர்
குண்டு கட்டு - குழிந்த கண்ணை உடையது

குண்டுரங்கள்-குப்பைகள்
குணக்கு-கோணல்
குணக்கெடுத்தல்-கோணலை நிமிரச் செய்தல்
குணுகுணுத்த-முணுமுணுத்த
குத்திரம்-வஞ்சனை
குதம்பாய் - காதணி அணிந்தவளே
குதம்பை-காதணியணிந்தவள்
குதர்க்கம்-விதண்டா வாதம்
குதித்த-சுரந்த
கும்பகம்-பூரித்த வாயுவை உள்ளே அடக்குவது
கும்பி-வயிறு ஒரு நரகம்
குமிழ்-குமிழம்பூ
குமைத்தவன்-அழித்தவன்
குயக்கலம்-மட்பாத்திரம்
குடம்-முலை
குரம்பை-உடம்பு, கூடு
குருகு-பறவை
குருதி-இரத்தம்
குரும்பை-தென்னம்பிஞ்சு
குருளை-குட்டி
குரோதம்-கோபம்
குலமர் - உலோபிகள், கீழ்மக்கள்
குவலயம்-உலகம்
குவை-குவியல்
குழவி-குட்டி
குழு-கூட்டம்
குளம்-நெற்றி
குளிகன் - எட்டு நாகங்களுள் ஒன்று
குறங்கு-தொடை
குறடா-குதிரைச் சவுக்கு
கூகை-கோட்டான்
கூகை மாந்தர்-குருடர்
கூடல்-மதுரை நகரம்
கூத்தன்-சிவன்
கூதறை-இழிவு
கூவம்-கிணறு
கூற்று-யமன்
கெண்டு-செல்வம், புதையல்
கெந்தி-வாசனை
கெர்விதம்-கர்வம்
கேட்டி - கேட்பாயாக
கேணி - கிணறு
கேழல்-பன்றி
கைகாட்டும் காரணம்-சின் முத்திரைக்குக் காரணம்
கைச்சட்டம்-சிற்றேடு (சிட்டா)
கைச்சும்-வெறுத்தும்
கைதவன்-வஞ்சகன்
கொட்டில்-ஒதுக்கிடம்
கொட்டை-சிறு திண்டு
கொண்டாட்டம் மகிழ்ச்சி
கொணம்-கொள்ளுங்கள்
கொப்பம் யானை படுகுழி
கொம்பனை-பெண்
கொள்ளை-மிகுதி
கோகனகம்-தாமரை
கோகிலம்-குயில்
கோசம்-கருப்பை
கோட்சரக்கு-துன்பப்பொருள்
கோடி-தலை மாலை
கோத்தார்-சுற்றத்தார்
கோதாட்டி-பாராட்டி
கோரணி-கோளாறு
கோலம் அலங்காரம்
கோன்-தலைவன்
சக்ரதரன்-திருமால்
சகடக்கால்-வண்டிச்சக்கரம்
சகத்திரம்-ஆயிர இதழுடன் கூடிய இருதயத் தாமரை
சகம்-உலகம்
சகளம்-உருவமுள்ளது
சங்கபாலன்-அஷ்டமா நாகங்களுள் ஒன்று
சங்குடையான்-திருமால்
சங்கை சந்தேகம்
சட்கோணம்-அறுகோணச் சக்கரம்
சட்சமய பேதங்கள்-சைவம், வைணவம், சாக்தம், சௌரம், காணபத்தியம், கௌமாரம்

என்னும் அறுசமயம்
சட்டகம்-உடல்
சடக்கு-வேகம், சட்டை
சடம்-உடல்
சண்முகி முத்திரை - நீராடும் போது காதுகளையும் கண்களையும் நாசித் துவாரங்களையும் முறையே பெருவிரல் சுட்டு விரல் அணி விரல்களால் மூடும் முத்திரை
சத்தங்கள் - எழுத்துச் சொல் இலக்கணங்கள்
சத்த தாது-இரசம், உதிரம், எலும்பு, தோல், இறைச்சி, மூளை, சுக்கிலம் என்னும் எழுவகைப் பொருள்
சதகோடி-நூறு கோடி
சதி-வஞ்சனை
சதிர்-சமர்த்து
சதிரம்-சரீரம்
சதுரம்-நான்கு, சமர்த்து
சதுரர்-வல்லவர்
சம்பன்னர்-செல்வர்
சம்பு-சிவன்
சர்ப்பனை-வஞ்சனை
சரியை-கடவுளைக் கோவிலில் வைத்து வழிபடுதல்
சல்லாப லீலை-கலவிவிளையாட்டு
சவலை-மெலிவு
சாகை-கிளை
சாதம்-உண்மை
சாம்பவி-குருவின் திருநோக்கால் மாணவன் பாசத்தைச் சேதிக்கும் தீட்சை
சாமீபம்-கடவுளை அணுகியிருக்கும் நிலை
சாயுச்சியம்-சீவான்மா பரமான்மாவுடன் ஐக்கியமாகும் நிலை
சாரூபம்-கடவுளைப்போல் வடிவம் பெறுதல்
சாலோகம்-கடவுளுடன் ஒரே இடத்தில் வாழ்தல்
சாவல்-சேவல்
சாளிகை-பணப்பை
சாற்று-துதி
சிக்கு - எண்ணெய்க் கசண்டு நாற்றம்
சிங்கு வாயு-கழியும் காற்று
சிணுக்கு-சிக்கு
சித்தி - 'சிவஞான சித்தியார்' என்னும் சைவ சித்தாந்த சாஸ்திரம்
சிந்தூரம்-நீறு
சிம்புள்-சரபப்பட்சி
சில்லந்தட்டாமல் - தரித்திரம் அடையாமல்
சிலவர்-சிலர்
சிவ்வெழுத்து-சிவவெழுத்து
சிவாயம்-'நமசிவாயம்
சிற்குகி-சிறுமையடைந்து
சின்மயநோக்கு-ஞானப் பார்வை
சின்மயன்-அறிவு வடிவான கடவுள்
சின்னம்-அடையாளம்
சினம் கோபம்
சீதகங்கள்-சயமும் தராவும்
சுக்கிலம்-இந்திரியம்
சுகர்-இன்பமனுபவிப்பவர்
சுட்டான்-தீட்சித்தான்
சுட்டிறந்த பாழ்-அறிவிற்கெட்டாத சிதாகாசம்
சுணங்கன்-நாய்
சுத்தவித்தை ஐந்து-சுத்த வித்தை, ஈச்சுரம், சிவம், சத்தி, கிரியை
சுருக்கமற்ற சோதி-பரஞ்சோதியான கடவுள்
சுரோணிதம்-மகளிர் இரத்தம்
சுவாதிட்டானம் - மூலாதாரத்திற்கும் நாபிக்கும் இடையே ஆறிதழ்த் தாமரை வடிவாயுள்ள தானம்
சூத்திரம்-தந்திரம், நூற்கயிறு
சூதம்-வைப்புப் பாஷாண வகை
சூதவான்மணி-இரசக் குளிகை
சூதானம்-ஜாக்கிரதை

சூல்-கருப்பம்
சூள்-சபதம்
சூளாமணி-முடி மணி
செங்கதிர் சூரியன்
செந்நீர்- இரத்தம்
செப்படி வித்தை ஜால வித்தை
செப்பு பொற்கலசம்
செயநீர்-சுண்ணும்பும் நவச்சாரமும் கலந்த நீர்
செருக்கு கர்வம்
செவித்தால்-ஜெபித்தால்
செவியாமல் ஜெபியாமல்
செழும்பு செழிப்பு
செறந்தான்-நிறைந்தவன்
சேட்படுத்தார்-தூரத்திற் சென்றார்
சேமம் பாதுகாப்பு
சேய் பிள்ளை
சையோகித்து புணர்ந்து
சொக்கிட்டு கன்னம் வைத்து
சொகுசு அழகு
சொன்னம் பொன்
சோங்கு மரக்கலம் (கப்பல்)
சோடசம்-பதினறு
சோணகிரி - அருணசலம் (திருவண்ணமலை)
சோத்திரம் காது
சோமன் சந்திரன்
சோற்றுத் துருத்தி-உடல்
ஞாதிரு-அறிபவனுகிய ஆன்மா
ஞாளி-நாய்
ஞானம் அறிவால் கடவுளை வழிபடும் மார்க்கம், அறிவு
ஞானகரன்-ஞானத்துக்குப்பிறப்பிடமாய் உள்ளவன்
ஞெப்தி-ஞாபகம், அறிவு
ஞேயம்-அறியப்படும் பொருள்
தக்கன் - அஷ்டமாநாகங்களுள் ஒன்று
தச்சுக்கிட-பொருந்தியிரு
தசநாடி - இடைகலை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அத்தி சிங்குவை, சங்கினி, பூடா, குகு, கன்னி, அலம்புடை என்னும் பிராணவாயு இயங்கும் பத்து நாடிகள்
தசவாயு பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்னும்பத்துவாயுக்கள்
தட்டழித்தல்-அலையச்செய்தல்
தண் கதிர் சந்திரன்
தண்டிகை பல்லக்கு
தத்தி குதித்து
தந்திரம் நூல்
தம்முன் தமையன்
தமனியம் பொன்
தமியேன் தனியனுகிய யான்
தரா-ஓர் உலோகம்
தரிசு-விளையாத நிலம்
தருணம்புசம் புதிது அலர்ந்த தாமரை மலர்
தருமன்-யமன்
தவன சோமர் சூரிய சந்திரர்
தவிசு-இருக்கை
தழைப்பிப்பாய் - தழைக்கச்செய்வாய்
தளி-விளக்குத்தகழி (அகல்)
தளை-கட்டு
தற்பரம் பரம்பொருள்
தன்யம்-முலைப்பால்
தன்வியன் பாக்கியசாலி
தனு-உடல்
தனுவாதி நான்கு-தனு கரண புவன போகங்கள்
தாண்டவம் கூத்து
தாணு சிவன்
தாதர் அடியவர்
தாதி வேலைக்காரி
தாது கலங்கல் - மனச்சஞ்சலமடைதல்
தாப்ரம்-உடல்
தாமரையான்-பிரமன்

தாரகை-நட்சத்திரம்
தாரணி-பூமி
தாரம்-மனைவி
தாரை-வழி
தாலப்பிறப்பு-உலகப்பிறப்பு
தாலம்-உலகம்
தாவணை-யாடை ஏணை
தானவர்-அசுரர்
திகிரி-சக்கரம்
திகை-சோர்வு
திங்கள்-சந்திரன், மாதம்
திசை முகன்-பிரமன்
திடர்-மேடு
திண்ணம்-உண்மை
திமிர் வந்து-செவிடுபட்டு
திரம்-நிலைபெறு
திரயம்-மூன்று
திரிகண்ணி-மூங்கில்
திருக்கு-மாறுபாடு, மயக்கம்
திருத்தவிசு-சிறந்த இருக்கை
திரை-சுருக்கம்
திரோதாயி-திரோதான சத்தி
திவாகரம்-ஒளி
தின்மம்-தீமை
தினகரன்-சூரியன்
தீட்டம்-தீட்டு
தீர-முற்றும்
தீவகம்-விளக்கு
தீனர்-ஏழைகள்
துங்கம்-பெருமை
துடி-உடுக்கை
துவடப்பு-அறிப்பு
துதைந்து-நெருங்கி
துப்பாழ்-குற்றம்
துப்பு-பவளம்
துய்த்தல்-உண்ணுதல்
துரிசு-குற்றம்
துளபத்தான்-திருமால்
துளைந்தனை-ஏழ்கினுல்
துன்பு-துன்பம்
தூமை-தூயது அல்லாமை
தூர்-வேர், சேறு
தூரி-மீன் பிடிக்கும் பெருவலை, வலை
தெக்கவல்விரேல்-கொள்ள வல்லீராயின்
தெங்கு-தென்னைமரம்
தெத்த படம் - தீயிலிட்ட வஸ்திரம்
தெத்திட்டு-வேடிக்கையிற்பட்டு
தெருள்-அறிவு, தெளிவு
தேங்கு-நிறைவு
தேசிகர்-குரு
தேசிகன்-குரு
தேட்டம்-கவலை
தேயு-தீ
தேரை-தவளை
தேறல்-தேன்
தொக்கழிய-கூடியழிய
தொங்கல்-மலர் மாலை
தொடக்கு-சூதகம் முதலிய தீட்டுகள், உடல், சம்பந்தம்.
தொண்ணூற்றறுவர் - தொண்ணூற்ருறு தத்துவங்கள்
தொந்தம்-சம்பந்தம்
தொந்தி-வயிறு
தொம்பதம் - 'த்வம்' என்னும் பதம்
தொய்தம்-'தத்வமஸி' என்னும் வேத வாக்கியத்தில் 'த்வம்' என்னும் சொல்
தோகை - மயில்போலும் சாயலாள்
தோடு-மேலோடு
தோலேணி-உடல் ஆதாரம்
தோற்றம்-பிறப்பு
நகை-பல், சிரிப்பு
நச்சி-விரும்பி
நச்சு-விஷம்
நசை-விருப்பம்
நஞ்சு-விஷம்
நட்டணை-நடிப்பு
நடலை-துன்பம்

நடுவர்-யம தருமர்
நடுவன்-யமன்
நத்தி-விரும்பி
நந்தாத-கெடாத
நயப்ப-விரும்ப
நயலம் கண்
நரலை-ஒலி
நவின்று-விரும்பி
நற்றவர்-நல்ல தவத்தைச் செய்தவர்
நறை-தேன்
நன்பாய்-நன்மையாய்
நாகம்-துத்தநாகம்
நாட்டம்-கண், நோக்கம்
நாண்-வில்லில் இடும் கயிறு
நாப்பணது-நடுவிலுள்ளது
நாமம்-சொல்
நாயன்-தலைவன்
நாரி-பெண்
நாரியர்-பெண்டிர்
நாலாம்பதம் } சிவ சாயுச்சிய
நாலாம்பாதம் } பதவி
நாலு பதம்-சரியை, கிரியை, யோகம் ஞானம்
நாலுவகைக் கரு-அண்டசம் (முட்டையிற் பிறப்பது), சுவேதசம் (வியர்வையிற் பிறப்பது), உற்பீசம் (வித்து, வேர் முதலியவற்றில் தோன்றுவது), சராயுசம் (நீரிற்பிறப்பது)
நாவி-நாபி (கொப்பூழ்)
நாவிக்கமலம்-மணிபூரகம்
நாழி-ஒரு படி
நான்று-தொங்கி
நிட்களம்-உருவம் இல்லாதது
நிட்டை-சிவயோகம்
நிணவைப் புழு-பிணிப்புண்ட புழு
நிமலன்-கடவுள்
நிரவி நிற்பது-சமமாய்இருப்பது
நிராமயம்-நோயற்றது
நிலவறை-குகை
நிற்கை-நிற்றல்
நீரி-நீரில் வாழும் உயிர்
நீறு-சாம்பல்
நுண்ணியரில் நுண்ணியன்-அணுவுக்குள் அணுவாயிருப்பவன்
நெக்குநெக்கு-மிக நெகிழ்ந்து
நேதி-(நியதி) முறை
நேர்படுவது-தரிசிப்பது
பங்கயத்தோன்-பிரமன்
பங்கயம்-தாமரை மலர்
பங்கயன்-பிரமன்
பசாசம்-பிசாசு
பசை-அன்பு
பஞ்சப் பிரளயம்-ஐம்பூதப் பிரளய காலம்
பஞ்சரம்-கூடு
பஞ்சரித்து-கொஞ்சிப் பேசி
பஞ்சவர்-பாண்டவர்
பட்டம் காற்றுடி
பட்டயம்-தாமிரச்சாஸனம்
பட்டார்கள்-அழிந்தார்கள்
பட்டோலை-விதியேடு
படி-பூமி
படிறு-பொய்
பண்டாய-பழைமையான
பண்டி-வயிறு
பணத்தி-வேலைக்காரி
பணக்கன்-விஷ வைத்தியன்
பணிதி-ஆபரணம்
பத்தம்-குவியல்
பத்தியம்-பாட்டு
பத்திரம்-இலை
பத்துத்திசை-எட்டுத் திசையும் பூமியும் ஆகாயமும்
பதனம்-அமைதி
பதாம்புயம்-பாதத்தாமரை
பதி-தலைவன்
பதிட்டை-பிரதிஷ்டை
பதுப்பு-மறைப்பு
பதுமம்-தாமரை மலர்
பதுமன்-அஷ்டமாநாகங்களுள் ஒன்று

பயந்த-சிருட்டித்த, பெற்ற
பரத்தையர்-வேசிகள்
பரம்-பாரம் (சுமை)
பரமான்னங்கள்-விசேஷ உணவுகள்
பரமேட்டி-சிவன்
பரவை-கடல்
பரிக்கும்-தாங்கும்
பரிசு-தன்மை
பரிதி-சூரியன்
பரியாரம்-மருத்துவம்
பவம்-பிறப்பு
பவுரி-ஒரு வகைக் கூத்து
பழு-ஏணியின் படிச்சட்டம்
பற்பம்-பஸ்பம்
பற்பவாசனம்-மதுமாசனம்
பனிப்பு-நடுக்கம்
பாங்காய்-முறையாய்
பாங்கு-பக்கம்
பாசிழை - பசுமையான ஆபரணம்
பாபு-உளவாளி
பாடு-துன்பம்
பாடை-மொழி
பாணன்-தையற்காரன்
பாதாரவிந்தம்-அடித்தாமரை
பாந்தம்-பந்தம்
பாமம்-கோபம், பரப்பு
பாமவலி-பரவிய துன்பம்
பாயல்-படுக்கை
பாரம்-கொடுமை
பாரிடந்து-பூமியைத் தோண்டி
பாவகம்-அலங்காரம், குற்றம்
பாவை-பொம்மை
பாழி-கடல்
பாற்பசு-பசுத்தன்மை
பாற்றி-ஓட்டி
பிஞ்செழுத்து-சத்தி அட்சரம்
பிடி-கைப்பிடி, பெண் யானை
பிண்டம்-உடல்
பிணவாசம்-பிணநாற்றம்
பித்தாயம்-பற்றற்ற வைத்தியம்
பிரஞ்ஞை-முன் நிகழ்ந்ததை அறியும் அறிவு
பிரளி-புரளி
பிருதிவி-மண்
பிளவளவு-சிறிது
பிறவி-சோதரர்
பினத்தடம்-மாறுபட்ட இடம்
பீடிப்பையோ-வருத்துவாயோ
பீற்றல்-கிழியல்
பீற்றல் துருத்தி-கந்தல் தோற்பை
புக்கில்-உடல்
புங்கம்-உயர்வு
புரம்-உடம்பு
புரிந்து-விரும்பி
புரியட்டம்-சூட்சும சரீரம்
புரை-குற்றம்
புல்லறிவு-அற்ப அறிவு
புல்லி-கலந்து
புலர்ந்த-வாடிய
புலரா-குறையாத
புலை-புலாலுண்டல்
புலையேன்-இழிமகனானயான்
புவனம்-பூமி
புவனி-பூமி
புள்-பறவை
புளியிட்ட செம்பு - புளியிட்டுத் துலக்கியச் செம்புச் சிலை
புற்கலன்-உயிர்
புற்புதம்-நீர்க்குமிழி
புன்மை-அற்பம்
புனைந்தன-அணிந்தவை
பூ-பூமி
பூசல்-சண்டை
பூசை-பூனை
பூசை மாட்டுதல்-நன்றாக அடித்தல்
பூடணம்-ஆபரணம்
பூத்தானம்-புதுமை
பூதி-திருநீறு
பூதியம்-பஞ்ச பூதங்கள்
பூந்திரு-மலர்மகள் (இலக்குமி)
பூமான்-அரசன்
பூரகம்-வாயுவை உள்ளே இழுப்பது

பூரித்து-சந்தோஷித்து
பூவை - நாகணவாய்ப் பறவை (மைனா)
பூளை-பஞ்சு
பெட்டகம்-பெட்டி
பெட்டி-நெல் வகை
பெட்பு-விருப்பம்
பெத்த மலம்-ஆன்மாவின் பாச பந்தம்
பெருங்காயம்-பருத்த தேகம்
பேசானுபூதி-பேசாத அனுபவ ஞானம்
பேடு-பெட்டைப் பறவை
பேழை-பெட்டி
பேறு-பயன்
பையரவு-படமுடைய பாம்பு
பையல்-ஆண் குழந்தை
பொக்கசம்-பொக்கிஷம்
பொங்கம்-மகிழ்ச்சி
பொச்சாப்பு-மறதி
பொட்டணங்கள்-சிறு மூட்டைகள்
பொது-சபை
பொதும்பு-பொந்து
பொருவரிய-ஒப்பற்ற
பொள்ளல்-தொளை
பொற்பு-அழகு
பொறி-இந்திரியம், தலை விதி
பொறியிலி-ஐம்பொறிகளைக் கடந்த கடவுள்
பொன்னுணி-பொற்கம்பி
போக்கியம்-அனுபவம்
போகதர்-பாடகர்
போதம்-ஞானம்
போதமிழந்தான்-தற்போதம் இழந்த முதல்வன்
போது-பூ
போற்றி-துதிக்கின்றேன்
போன்ம்-போலும்
மக்கினம்பட்டு - மலக்குறைவு அடைந்து
மகத்தான பதுமன் - 'மகாபதுமன்' என்னும் பாம்பு
மகவு-குழந்தை
மசகம்-கொசு
மஞ்சனம் அபிஷேகம்
மண்வளைந்த நற்கிற்று-சுவாதிட்டானம்
மணிபூரகம்-நாபியிடத்தில்சுவாதிட்டானத்தின் மேலாகப் பத்திதழ்த் தாமரை வடிவமாகக் கருதப்படும் தானம்
மதி-சந்திரன்
மதித்திடுவோம்-கணக்கிடுவோம்
மதிரம்-கள்
மயல்-மயக்கம்
மரக்கா-மரச்சோலை
மருவார்-கலவார்
மருள்-மயக்கம்
மவ்வெழுத்து-மலவெழுத்து
மறலி-யமன்
மறுகி-மயங்கி
மறை-வேதம்
மனக்கரணம்-மனம், புத்தி, சித்தம் என்னும் அகக்கரணங்கள்
மனித்தர்-மனிதர்
மனு-மனிதன்
மனோலயன் - மனத்தில் தங்கியிருப்பவன்
மாகதர்-பாடகர்
மாகம்-ஆகாயம்
மாங்கிசம்-மாமிசம்
மாட்சி-பெருமை
மாடு-பொன்
மாடை-பொற்காசு
மாண்-பிரமசாரி
மாந்தர்-மனிதர்
மார்புநூல்-பூணூல்
மாரணம்-அழிவு
மாரீசம்-வஞ்சகம்
மாருதம்-காற்று
மால்-மயக்கம், திருமால்
மாழ்கினர்-இறந்தனர்
மாழாந்து-மயங்கி
மானம்-குற்றம்

மானுர்-பெண்டிர்
மானிடம்-மனித்த் தொகுதி
மிடறு-கழுத்து
மித்துரு-நண்பன்
மித்தை-பொய்
மின் போல்வார்-பெண்டிர்
மினக்கெடுதல்-வீணுதல்
முக்கனி-மா, பலா, வாழைக்கனி
முசிப்பு-அழிவு
முட்ட-முழுதும்
முட்டு-குற்றம்
முடச்கு-சிறு குடிசை
முண்டகமலர்-தாமரை மலர்
முத்தர்-முத்தி பெற்றவர்
முத்தாடி-முத்தம் தந்து
முத்தி-மோட்சம்
முதற்பாழ்-சிதாகாசம்
முந்நீர்-கடல்
முப்பத்தறுவர்-முப்பத்தாறு தத்துவங்கள்
முப்பாழ்-விந்து, மோகினி, மான் ஆகிய மூன்று மாயை
முயக்கம்-தழுவுதல்
முயலகன்-ஓர் அசுரன்
முளரி-தாமரை
முறி-ஓலைப்பத்திரம்
முன்னை வினை - சஞ்சித கன்மம், பிராரத்துவ வினை
மூக்கு முனை-சுழு முனை
மூடகம்.மறைந்த இடம்
மூரல்.பல்
மூலாதாரம் - ஆறு தாரங்களுள் குய்யத்துக்கும் குதத்துக்கு மிடையில் நான்கிதழ்த் தாமரைபோல உள்ள சக்கரம்
மூழ்வது-முழுகுவது
மூன்றுவகைக்காட்சி- தத்துவதரிசனம், ஆன்மதரிசனம், சிவதரிசனம்
மூன்றுவகைக் கிளை-சுத்தம், அசுத்தம், சுத்தாசுத்தம்
மூன்று வளையமிட்டு மூளைத்தெழுந்த கோணம்-அனுகதம்
மெட்டு-காலாழி
மெத்தியிடும்-மிகுத்திடும்
மெய்.உடல்
மெய்யன் கடவுள்
மெழுக்குவிழும்-மெழுகியிருக்கும்
மேதி-எருமை
மேதினி.உலகம்
மேய்ந்து-மூடி
மேரு வரை-மாமேரு மலை
மொட்டு அரும்பு
மோகாந்தம் மோகத்தைவிளைக்கும் அழகு
மோதகம்.கொழுகட்டை
யாக்கை-உடல்
யோகம் - கடவுளை மனத்தால் வழிபடும் மார்க்கம்
யோனி-பெண் குறி
லலாடம்.நெற்றி
லகரி.மயக்கம்
வகுத்த-படைத்த
வங்கிசம்-பரம்பரை
வசக்கட்டு.வியாபாரக் கூட்டாளி வசம் கொடுத்த பொருள்
வசை குற்றம்
வட்டவழி-ஆஞ்ஞை
வட்டில்-ஏனை
வடிவாள்-கூர்மையான வாள்
வண்டிலெச்சில்.தேன்
வண்டுலங்கு வண்டும் கொசுவும்
வண்ணம் அழகு
வண்ணான்.பிராணன்
வத்து-பரம்பொருள்
வயங்கும்-விளங்கும்
வரம் மேன்மை
வரம்பு-எல்லை
வரை-மலை
வல்லபம்-சாமர்த்தியம்
வவ்வெழுத்து-சத்தியெழுத்து
வழக்கத்தலம்-பழகிய ஊர்

வழும்பு-அழுக்கு, நிணம்
வள்ளை-வள்ளைக் கொடிபோன்ற காது
வளவு-வீடு
வளி-காற்று
வறையோடு-வறுக்கும் சட்டி
வன்பர்-கொடியவர்
வன்மை-வலிமை
வன்னி-நெருப்பு
வாக்காதி ஐவர் - வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் ஆகிய கன்மேந்திரியங்கள்
வாகு-சாமர்த்தியம்
வாகுவலயம்-தோள் வளை
வாசவன்- இந்திரன்
வாசாமகோசரம்-வாக்குக்கு எட்டாதது
வாசி-பிராணவாயு
வாசுகி - அஷ்டமா நாகங்களுள் ஒன்று
வாய் புதைத்து-வாய் மூடி
வாயு-காற்று
வாயுவறுகோணம்-விசுத்தி
வாரணம்-சங்கு, யானை
வாரணவ்-விநயகன்
வாரிதி-கடல்
வாலை-'வாலாம்பிகை' என்னும் சத்தி. கன்னிப்பெண்
வாவ்-ஒளி
வான்பதி-இந்திரன்
வான்பொருள் - உயர்வான பொருள்
விக்கு-விக்குள்
விங்களங்கள் - கபட வார்த்தைகள்
விசுத்தி - அநாகதத்திற்குமேல்பதினறிதழ்த் தாமரை வடிவினதாகக் கருதப்படும் அடி நாத்தானம்
விசும்பு-ஆகாயம்
விட்டில்-'பதங்கம்' என்னும்சிறு பூச்சி
விடக்கு-சவம், மாமிசம்
விடை-எருது
விண்ட-சொல்லிய
விண்டவர்கள்-பேசினவர்கள்
விண்ணு-திருமால்
வித்தகன்-ஞான சொரூபன்
வித்தாரம்-செல்வச் சிறப்பு
வித்தியாதத்துவங்கள் - கலை, காலம், நியதி, வித்தை, அராகம், புருடன், மாயை என்பவை
விதனம்-விசனம்
விதி-பிரமன்
வியன்-பெருமை
விரத்தி-வெறுப்பு
விரவி-கலந்து
விரளம்- நீக்கம்
விருத்தம்-குற்றம்
விரை-வாசனை
விழலர்-வீணர்
விழி வெளி மாக்கள் - புறக்கண்களையுடைய மனிதர்கள்
விழுப்பொருள்-மேலான பொருள்
விழும்பு-நிணம்
விள்ளாதே-சொல்லாதே
வீடு-மோட்சம்
வீணைத்தண்டு-முதுகெலும்பு
வீந்த-அழிந்த
வீறுப்பு-கர்வம்
வெங்கொளித்தேள் - கடுமையான தீப்போலக்கொட்டும் தேள்
வெட்டவெளி-சிதாகாசம்
வெண்குணத்தான் - அறிவில்லாதவன்
வெய்ய கொடிய
வெல்லை-அறியாமை
வெள்ளி மலை-கைலாய மலை
வெளியில் வெளி-பூதாகாயத்திற் சிதாகாயம்
வென்-முதுகு
வேட்டகாரர்-கொலை செய்பவர்
வேட்டுவன்-குளவி
வேதமுடிவு-கடவுள்
வேதா பிரமன்
வேதியீர்-பிராமணர்களே
வேய்-மூங்கில்
வேழம் - விளாம்பழத்தைப் பற்றிக் கெடுக்கும் ஒரு நோய்
வேள்வி-யாகம்
வேனல்-வெப்பம்

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

## அகப்பேய்ச் சித்தர் பாடல்

## அகஸ்தியர் ஞானம், I—V



## சட்டைமுனி ஞானம்

## அழுகணி சித்தர் பாடல்



## இடைக்காட்டுச் சித்தர் பாடல்

## இராமதேவர் பூஜா விதி



## உரோம ரிஷி ஞானம்



## கடுவெளிச் சித்தர் பாடல்

## கருவூரார் பூஜா விதி



## காகபுசுண்டர் உபநிடதம்

## காகபுசுண்டர் காவியம்



## காகபுசுண்டர் குறள்

## காகபுசுண்டர் ஞானம்



## குதம்பைச்சித்தர் பாடல்

# சட்டைமுனி நாயனர்

## முன் ஞானம் நூறு

# சட்டைமுனி நாயனார்

## பின் ஞானம் நூறு

## சிவபோக சாரம்

# சிவ வாக்கியர் பாடல்

# சிவானந்த போதம்

## சுப்பிரமணியர் ஞானம்

## சூரியானந்தர் சூத்திரம்



## சொக்கநாத வெண்பா

## ஞானக் கும்மி

## ஞானசர நூல்



## ஞான ரத்தினக் குறவஞ்சி

# திருமூல நாயனர் ஞானம்



# திருவருட்பாத் திரட்டு

## திருவள்ளுவர் ஞானம்



## நந்தீஸ்வரர் பூஜா விதி



## நெஞ்சறி விளக்கம்

# பட்டினத்தார் பாடல்

# பத்திரகிரியார்

## மெய்ஞ்ஞானப் புலம்பல்

## பாம்பாட்டி சித்தர் பாடல்

## வால்மீகர் சூத்திரஞானம்

# வாலைக் கும்மி